# தீக்கதிர்

ஆசிரியர்: எம். என். ராவுண்ணி

8 பக்கங்கள்
★
விலை 15 காசு

கதிர் 2 | சனிக்கிழமை | 1-8-1964 | விலை 15 காசு | பொறி 6


# இந்திய முதலாளித்துவத்தின் முரண்பாடுகளும் அது செல்லும் திசைவழியும்

## கம்யூனிஸ்ட் கட்சியின் நகல் திட்ட வரையறுப்பை விளக்கி தெனாலி கன்வென்ஷனில்

## தோழர் பசவபுன்னையா விளக்கவுரை

நமது நீண்டகாலக் குறிக்கோள் என்ன? எவ்வாறு அந்த குறிக்கோளினை முன்வைத்து இயங்குவதின் மூலம் நமது இறுதி லட்சியமான சோஷலிஸத்தையும் அதன் அடுத்த கட்டமான கம்யூனிஸத்தையும் அடைய முடியும்? இந்தப் பிரச்சினைகளுக்குத் தீர்வுகாண இன்றைய அரசியல் பொருளாதார நிலைமையைப் பரிசீலனை செய்யவேண்டும். அதில் தோன்றியுள்ள பிரதான முரண்பாடுகள் என்ன? அம் முரண்பாடுகள் எவ்வாறு வளர்ச்சி பெறுகின்றன என்பதைப்பார்க்க வேண்டும். முரண்பாடுகள்என்று குறிப்பிடும்பொழுது இந்திய சமுதாயத்தில் இன்றைய காலகட்டத்தில் தோன்றியுள்ள வர்க்கங்களிடையே உள்ள முரண்பாடுகளையே குறிப்பிடுகிறோம்.

இன்றைய அரசாங்கத்தை பெரு முதலாளிகள் தலைமையிலுள்ள முதலாளித்துவ நிலப் பிரபுத்துவ அரசாங்கம் என்கிறோம். இது இன்றைய அரசியல் பொருளாதார நிலைமையிலிருந்து எழும் கணிப்பு. இந்த அரசு அன்னிய ஏகாதிபத்திய முதலாளிகளின் சுரண்டலை இங்கு அனுமதிக்கிறது. தொழில் வளர்ச்சிக்கு அத்தியாவசியமான நடவடிக்கையான நிலப் பிரபுத்துவத்தை ஒழிக்க மறுக்கிறது. நிலப்பிரபுத்துவ அமைப்பு, முதலாளித்துவ வளர்ச்சிக்கே ஒரு தடைக் கல். முதலாளிகளுக்கும் நிலப் பிரபுக்களுக்குமிடையே முரண்பாடு உண்டு. அதனால் தான் சில அரைகுறை நிலச் சீர்திருத்தங்களை மேற்கொண்டது, எனினும் அச் சீர்த்திருத்தங்கள் நிலப்பிரபுத்துவத்தை அடியோடு ஒழித்துவிடவில்லை. எனவே முதலாளிகளுக்கும் நிலப் பிரபுத்துவத்திற்குமிடையே முரண்பாடு இருந்தபோதிலும், அரசாங்கத்தைக் கையில் வைத்துள்ள பெரும் பூர்ஷ்வாக்கள் நிலப் பிரபுத்துவத்துடன் சமரசம் செய்து கொண்டுள்ளனர். இது இந்த முரண்பாட்டின் இன்றைய நிலைமை.

அடுத்து, இன்றைய அரசாங்கம் முதலாளிகள் நிலப் பிரபுக்கள் அரசாங்கம் என்றபோதிலும் அதற்குத் தலைமைவகிப்பது பெரு முதலாளிகள். இந்தப் பெரு முதலாளிகளுக்கும் ஏனைய முதலாளிகளுக்குமிடையே முரண்பாடு உண்டு. பெரு முதலாளிகள் மத்திய சிறு முதலாளிகளை விழுங்கி ஏகபோக முதலாளிகளாக வளருகிறார்கள். இவ்வாறு பெரு முதலாளிகளுக்கும் சிறு முதலாளிகளுக்குமிடையே முரண்பாடு இருந்தபோதிலும் பெரு முதலாளிகளை எதிர்த்து மற்ற முதலாளிகள் புரட்சி சக்திகளுடன் சேரும் அளவிற்கு இந்த முரண்பாடு இன்று வளரவில்லை.

பெரும் முதலாளிகளுக்கும் இந்திய நாட்டில் முதலீடு செய்துள்ள ஏகாதிபத்திய முதலாளிகளுக்குமிடையே முரண்பாடு உண்டு. ஆனால் இன்று இந்தியப் பெரு முதலாளிகளும் ஏகாதிபத்திய முதலாளிகளும் கூட்டுறவு ஒப்பந்தங்கள் செய்துகொண்டு கூட்டுச் சுரண்டலில் ஈடுபட்டுள்ளனர். இந்த கூட்டுறவு நாளுக்கு நாள் அதிகரித்துச்கொண்டேவருகிறது. குறிப்பாக பெரு முதலாளிகளிடையே உள்ள ஏகபோக முதலாளிகளுக்கும் ஏகாதிபத்திய முதலாளிகளுக்குமிடையே சமீப காலத்தில் ஒத்துழைப்பு மிகத் தீவிரமாகியுள்ளது. ஏகாதிபத்திய முதலாளிகளுக்கும் பெரு முதலாளிகளுக்குமிடையே முரண்பாடு இருந்தபோதிலும் இன்றைய நிலைமை என்னவெனில் இருவரும் மேலும் மேலும் அதிகமான கூட்டுச் சுரண்டலில் ஈடுபட்டுள்ளனர்.

இந்த இருபிரிவுகளிடையே உள்ள முரண்பாட்டை மிகைப்படுத்தி இவர்களிடையே உள்ள முரண்பாட்டை தீவிரமாக்க தொழிலாளி வர்க்கம் இந்தியப் பெரு முதலாளிகளுக்கு ஊக்கமளிக்க வேண்டுமென்ற கருத்து சரியல்ல; இந்த வாதந்தான் டாங்கேயின் திரிபுவாதத்தில் முடிந்துள்ளது. இந்த முரண்பாட்டை மிகைப்படுத்தி, நடைமுறையில் நாம் காணும் ஏகாதிபத்திய—இந்தியப் பெரு முதலாளித்துவ ஒத்துழைப்பைக் குறைத்து மதிப்பிடுவதன் விளைவு இது. இது இன்று பாட்டாளி வர்க்கக் கட்சி, பெரும் பூர்ஷ்வாக்களுக்கு வால் பிடிக்குப் போக்கில் கொண்டு விட்டிருக்கிறது.

நமது திட்டத்தில் இந்த முரண்பாடு இருப்பதை நாம் நிச்சயம் கணக்கில் எடுத்துக்கொண்டு தான் நமது கடமைகளை வகுத்துள்ளோம்.

நமது நகல் திட்டத்தின் 116வது ஷரத்தில் கீழ்வருமாறு குறிப்பிட்டுள்ளோம்:—'' இந்திய பூர்ஷ்வா வர்க்கம் ஒரு வர்க்கமென்ற வகையில் ஏகாதிபத்தியத்துடனும், நிலப்பிரபுத்துவம், மற்றும் அரைகுறை நிலப் பிரபுத்துவ விவசாய அமைப்பு முறையுடனும் தன்னுடைய மோதுதல்களையும் முரண்பாடுகளையும் கொண்டிருக்கிறது. ஆனால் சுதந்திரமடைந்தபின், இவ்வர்க்கத்தின் பெரும்பூர்ஷ்வா மற்றும் ஏகபோக முதலாளித்துவப் பகுதி — சமரசம், நிர்ப்பந்தம், பேரம் ஆகியவற்றின் மூலம் இந்த மோதுதல்களையும் முரண்பாடுகளையும் தீர்ப்பதற்கு—இந்திய அரசின்மீது தனக்குள்ள பிடிப்பைப் பயன்படுத்துகிறது. இந்த நிகழ்ச்சிப் போக்கின் போது. இந்தப் பகுதி அன்னிய ஏகபோக முதலாளிகளுடன் பலமான பிணைப்புகளை ஏற்படுத்திக் கொண்டுவருகிறது. இந்திய நிலப் பிரபுக்களுடன் சேர்ந்து அரசியல் அதிகாரத்தைப் பங்கு போட்டுக்கொள்கிறது. ஒருபுறத்தில் ஏகாதிபத்திய வாதிகளுடன்

(7-ம் பக்கம் பார்க்க)

### சென்னையில்

## தோழர் பி. ராமமூர்த்தி பேசுகிறார்

தெனாலி கன்வென்ஷன் முடிவுப்படி ஆகஸ்ட் 5-ந் தேதி சென்னையில் நடக்கவிருக்கும் விலைவாசி உயர்வு எதிர்ப்பு தின பொதுக்கூட்டத்தில் தோழர் பி. ராமமூர்த்தி பேசுகிறார்.

சிந்தாதிரிப்பேட்டை, மங்கபதி நாயக்கன் தெருவில் நடக்கவிருக்கும் விலைவாசி உயர்வு எதிர்ப்பு தின கூட்டத்தில்

தோழர்கள்: பி. ராமமூர்த்தி
வி. பி. சிந்தன்
கே. கஜபதி

ஆகியோர் பேசுவார்கள். தொழிலாளர்களே! உழைக்கும் மக்களே! ஆயிரமாயிரமாய் அணிதிரள்வீர்!

கம்யூனிஸ்ட் கட்சி சென்னை மாவட்ட இணைப்புக் குழு.

★ கம்யூனிஸ்ட் வார ஏடு ★

# தீக்கதிர்

மலர் 2 | 1-8-64 | பொறி 6


# தஞ்சை மாவட்டத்தில் நமது இயக்கம் பலமாகிறது

## மணலி கோஷ்டி ஓட்டமெடுக்கிறது!

நாகை தாலுக்காவில் திரிபுவாதத்தை முறியடிக்கும் தத்துவார்த்த அரசியல் விளக்கப் பொதுக்கூட்டங்கள் தொடர்ந்து நடந்துக் கொண்டிருக்கின்றன. திரிபுவாத மணலி கம்பெனி சமூக விரோதிகள் சிலரையும், கட்சியிலிருந்து வெளியேற்றப்பட்ட சிலரையும் பிடித்து நாகை நகரம், கீவளூர், திருவாரூர் போன்ற இடங்களில் ஆர்க்கனேசர்களாகவும், கன்வீனர்களாகவும் நியமனம் செய்து போட்டி ஸ்தாபனம் அமைக்கவும் ஸ்தானம் நடவடிக்கை எடுக்கவும் முயற்சித்து மூக்கறுந்து வருகிறது. இதோ உதாரணம் மதுவிலக்கு சட்ட குற்றத்தின் கீழ் தண்டனை பெற்றவரும், கள்வேண்டுவோர் சங்க காரியதரிசியும், 1963-இல் கட்சியிலிருந்து விலகப்பட்ட வருமான திரு. ஜான் என்பவர் தான் மணலி கம்பெனியின் ஆர்கனேசர் இதே போல் கட்சிக்கு கணக்குக் கொடுக்க மறுத்ததிற்காக விலக்கப்பட்ட ஒரு நபர் கீவளூர் கன்வீனர் ஜில்லா நிர்வாக குழு உறுப்பினர்.

நாகை ரோலிங் மில் தொழிலாளர் போராட்டத்தில் அவர்களின் சுயரூபம் வெளிப்பட்டவுடன் சொல்லிக் கொள்ளாமலேயே ஓடினர், கீவளூரிலும். சிக்கலிலும் மணலி பேசும் பொதுகூட்டங்களுக்கு ஏற்பாடு செய்து (10 நாள் விளம்பர வேலைகளில் ஈடுபட்டு, காங்கிரஸ் கட்சி திராவிடர் கழகம் ஆகியவைகளின் பிரச்சார, ஆள் திரட்டும் ஆதரவுடன்) முறையே 300 பேர்களும் 62பேர்களும்திரண்ட கூட்டத்தைத்தான்மணலிகாணமுடிந்தது, பாவம் மணலியார், தோழர்கள் பி. ஆர்; ஆர். முருகையா ஏ. கே. ஜி. ஆகியோர்கள் மீது தனது கீழ்த்தர நாலாந்தர வார்த்தைகளை கக்கி அரசியல் பிரச்சாரம் செய்தார். தோழர் பி. ஆர். நிலப்பிரபுக்களிடமும், முதலாளிகளிடமும் ரசீது போடாமல் லஞ்சம் வாங்குபவன், ராஜாஜியின் அடிவருடி கம்யூனிஸ்ட் துரோகி, அவன், இவன் என்று ஆவேசமாக பேசி தீர்த்தார். உட்கார்ந்திருந்த ஜனங்களில் பெரும்பாலோர் மணலியின் பேச்சைதாங்க முடியாமல், கூட்டத்தை விட்டு சென்று விட்டனர். இந்நிலையில் நமது கூட்டங்களுக்கு ஆயிரக் கணக்கில் மக்கள் திரண்டு வந்து நமது கொள்கை பிரகடனங்களை ஆரவாரம் செய்து வரவேற்கின்றனர். இதோபட்டியல் 30-6-64 நாகையில் விலைவாசி உயர்வை எதிர்த்துஆர்ப்பாட்டம்,பொதுக்கூட்டம் 5 ஆயிரம் பேர் பங்கு கொண்டனர். 1-7-64 இல் பசுக்கர வெளியில் பொதுக்கூட்டம். 3-7-64 இல் விழுந்தூராவடியில் தி. மு. கவிலிருந்து பிரிந்து வந்த தோழர்கள் முயற்சியில் கொடியேற்று விழா, பொதுக்கூட்டம். 8-7-64ல் பாலையூர் பொதுக்கூட்டம்தோழர். ஆர். முருகையா, ஏ. ஜி. கஸ்தூரி ரெங்கன் ஆகியோர் பேசினர்கள். பாவலர் வரதராஜன் குழுவினர் இன்னிசை நடைபெற்றது. 3 ஆயிரம் பேர் கலந்து கொண்டனர்.

9-7-64 இல் வாழக்கரையிலும் வேட்டைக்காரனிருப்பிலும் பொதுக்கூட்டங்கள் நடைபெற்றன. வேட்டைக்காரனிருப்பில் தோழர் ஆர். முருகையா பேசினர், பாவலர் கச்சேரி நடைபெற்றது. வாழக்கரையில் தோழர் கஸ்தூரி ரெங்கன் பேசினர். வேட்டைக்காரனிருப்பில் 3 ஆயிரம் பேர்களும் வாழக்கரையில் 2000பேர்களும் திரண்டனர்

10-7-64 இல் நாகை படகு தொழிலாளர் சங்க ஆண்டு விழா பொதுக்கூட்டம் நடைபெற்றது. தோழர்கள் ஆர். ரெங்கன், ஆர். முருகையா, வி. மகாலிங்கம், ஜி, சின்னையன் ஆகியோர் பேசினர்கள்.

11-7-64 இல் கீவளூரில் வி. ச. வி. தொ. ச. சிறப்பு மகாநாடு நடைபெற்றது. தோழர்கள். ஆர். ரெங்கன், ஆர். முருகையா ஆகியோர் கருத்துரை ஆற்றினர்கள். முக்கிய தீர்மானங்கள் நிறைவேற்றப் பட்டன. அதே நாள் மாலையில் திருக்குவளையில் பொதுக்கூட்டம் பாவலர் கச்சேரியும் நடைபெற்றது.

12-7-63 இல் வலிவலத்தில் பொதுக்கூட்டம். பாவலர் கச்சேரி நடைபெற்றது.

13-7-64 இல் சிக்கல்லில் திருத்தல் வாதிகள் கூட்டம். சமூக விரோதிகளின் முயற்சியில் நடைபெற்றது. கள்ளக்கடத்தல் வேலையில் பலே சூரப்புலி ஒருவரின் காரில் மணலி கந்தசாமி வந்திறங்கினர். 62 பேர் கூடிய கூட்டம். அதே நாள் சிக்கலுக்கு 1 மைல் தொலைவிலுள்ள சங்கமங்கலத்தில் நமது கூட்டம். சுமார் 4 ஆயிரம் பேர் கலந்து கொண்டனர். ஆர். முருகையா பேசினர். பாவலர் கச்சேரி நடைபெற்றது. தஞ்சை மாவட்ட முழுவதிலும் நமது இயக்கம் தொடர்ந்து நடைபெற்று வருகிறது.

# ஆகஸ்டு 16

## அநியாய விலைவாசி உயர்வு எதிர்ப்புப் போராட்ட தினம்

உணவு தான்யங்களின் விலை உயர்வைக் குறைப்பதைப் பற்றி இந்திய அரசாங்கமும் அதன் மந்திரிகளும் நாள்தோறும் பல அறிக்கைகளை வெளியிடுவதில் குறைச்சல் இல்லை. ஆனல் இவற்றின் காரணமாக நிலைமை திருந்துமா என்பதுதான் கேள்வி.

அரிசி, கோதுமை ஆகியவற்றின் மொத்த உற்பத்தி 1963-ம் ஆண்டைவிட 1964-ம் ஆண்டில் 30 லட்சம் டன் அதிகமென்று கூறுகிறார் உணவு மந்திரி திரு. சி. சுப்ரமணியம்.

எனவே உணவு தான்யங்களை உற்பத்தியாளர்களும், வியாபாரிகளும் தேக்கி வைத்திருப்பதுதான் விலைவாசி உயர்வுக்கு காரணமென்கிறார்.

இந்த அடிப்படையில் அவர் கூறும் பரிகாரம் என்ன ? உற்பத்தியாளர்கள், வியாபாரிகள்' உபயோகிப்போர் அனைவருக்கும் உணவு தான்யங்களின் மொத்த, சில்லறை, அதிகபட்ச விலைகளை நிர்ணயித்து அறிவித்துவிட அரசாங்கம் முடிவு செய்திருக்கிறது என்பதேயாகும்.

இன்றுள்ள உயர்ந்தபட்ச விலைகளை கணிசமாகக் குறைத்து அறிவிக்கும் நோக்கம் அரசாங்கத்திற்கு கிடையாது என்பது தெரிகிறது. மாறாக, இன்றைய உயர்ந்தபட்ச விலைகளையே ஏறக்குறைய அரசாங்க அறிவிப்பு விலைகளாக நிர்ணயிப்பதன் மூலம், உயர்ந்த விலைகளும், பெருத்த லாபமும் சட்டபூர்வமாகவே கிடைக்குமென்பதை அறிந்து தேக்கி வைக்கப்பட்டுள்ள தானிய சேமிப்புக்கள் வெளியே வந்துவிடும் என்று அரசாங்கம் கருதுகிறது.

இன்றுள்ள உயர்வான விலைகளையே, அரசாங்க விலைகளாக நிர்ணயித்தால், அது வர்த்தகச் சூதாடிகளுக்கும் கள்ள சேமிப்பாளர்களுக்கும் பணிந்துபோகும் செயலாகும். மேலும் இத்தகைய உயர்ந்த விலை நிர்ணயிப்பினல், உணவு தான்யங்களை வாங்கி உபயோகிக்க வேண்டிய நிலையில் உள்ள சாதாரண மக்களுக்கு விலைவாசி உயர்வின் கொடுமை கிஞ்சிற்றும் குறையாது. இதை அரசாங்கம் உணரவேண்டும். விலை நிர்ணயம் மக்களுக்கு சாதகமானதாக இருக்கவேண்டும்.

உணவு தானிய சேமிப்புக்களை அரசாங்கத்திற்கு அறிவிக்கவேண்டுமென்பது அரசாங்கத்தின் மற்றொரு முடிவாகும்.

இந்தச் சேமிப்புக்களை வெளிக்கொண்டுவருவதற்கும், உடனடியாகக் கொள்முதல் செய்வதற்கும் அரசாங்கம் நாடு முழுவதும் மக்களின் முன்முயற்சிக்கு ஆக்கம் அளித்து முயற்சித்தால் பெருமளவு உணவு தானியங்களை கொள்முதல் செய்ய முடியும் என்பது தெளிவு.

உணவு தான்யங்களை பதுக்கி வைப்பதில் ''கணக்கில் இல்லாத கறுப்புப் பணம்'' முக்கிய அம்சமாக விளங்குகிறது என்று கூறுகிறார் இந்திய உணவு மந்திரி.

தங்களுடைய ஆட்சியின் சிறப்பான சாதனைகளில் ஒன்றாகிய ''கறுப்புப் பணக் குவியலை'' ஒழிப்பதற்கு காங்கிரஸ் அரசாங்கம் தீவிர நடவடிக்கை எடுக்க இன்றாவது முன்வருமா ?

உணவு தான்யங்களின் விலைவாசி உயர்வைக் கட்டுப்படுத்த பாங்குகளை தேசவுடமையாக்குவது மிகவும் அத்தியாவசியமானது என்பதை இங்கு மீண்டும் வற்புறுத்துகிறோம்.

உடனடியாக, தேவைப்படும் இடங்களில் எல்லாம் நியாய விலைக் கடைகளை ஏற்படுத்தவும், அவற்றின் மூலம் முறையான வினியோகம் நடைபெறவும், அரசாங்கம் நடவடிக்கை எடுக்கவேண்டும். இது அரசாங்கத்தின் குறைந்தபட்ச, தவிர்க்கப்பட முடியாத கடமையாகும்.

இந்தக் கோரிக்கைகளை வற்புறுத்தவும், மக்களின் குரலை ஒலிக்கவும், தெனலி கன்வென்ஷன் முடிவுப்படி, ஆகஸ்ட் 16-ம் தேதி விலைவாசி உயர்வு எதிர்ப்பு தினத்தன்று தமிழகமெங்கும் விரிவான அளவில் கிளர்ச்சி செய்யுமாறு கட்சித் தோழர்களையும், ஜனநாயகவாதிகளையும், பொதுமக்களையும் அறைகூவி அழைக்கிறோம்.

## ரூ. 25 ஆயிரம் நிதி சேர்க்கும் இயக்கம்

மத்திய அமைப்புக் குழுவின் பணியை நடத்த ரூபாய் 25 ஆயிரம் வசூலிக்க வேண்டும் என்று மகாநாடு தீர்மானிக்கிறது. அமைப்புக் குழு தன் பொறுப்புகளை நிறைவேற்றும் முறையில் இந் நிதிக்குத் தாராளமாக உதவுமாறு எல்லா கட்சிஅங்கத்தினர்களையும் அனுதாபிகளையும் தெனலிமாநாடு கேட்டுக்கொள்ளுகிறது.

## ஏஜண்டுகள் கவனத்திற்கு...

''தீக்கதிர்'' ஜூன் மாத பில்லுக்கு பணம் அனுப்பாத ஏஜண்டுகளுக்கு அடுத்த வாரம் முதல் பத்திரிக்கை அனுப்பப்பட மாட்டாது.

பணம் அனுப்பாத ஏஜண்டுகள் உடனே பணம் அனுப்பி வைக்க வேண்டும்.

நிர்வாகி
தீக்கதிர்

# மக்களின் நியாயமான பொருளாதார அரசியல் போராட்டங்களை நடத்துவது அதிதீவிரவாதமா?

[தோழா இ. எம். எஸ. நம்பூதிரிபாட்]

**கேள்வி :—1948–51 கால கட்டத்தில் நடத்தியதுபோல், 'அதிதீவிரவாதப்' போக்கின் மூலம் கட்சியையும், மக்களையும் துன்பத்தில் ஆழ்த்தும் முறையில்தான் இடதுசாரிக் கம்யூனிஸ்ட்டுகள் நடக்கின்றனர் என்று வலதுசாரிக் கம்யூனிஸ்ட்டுகள் குற்றம் சாட்டுகின்றனரே; அதுபற்றி தங்களது கருத்து என்ன?**

**பதில் :—** தங்களது எதிராளிகளுக்கு விரோதமாகக் கடுமையான அவதூறுகளைப் பொழிவதன் மூலம், தங்களது குற்றம் குறைகளை மறைத்துக்கொள்ளலாம் என்ற ஒரு தந்திரோபாயத்தையே—இப்படிப்பட்ட அவதூறைப் பொழிவதன் மூலம்—கைக்கொள்ளுகின்றனர் வலதுசாரியினர்.

பொது ஜனங்களுடைய பின்பலம் இல்லாததோர் கட்சியானது அதி தீவிரவாதச் செயல்களின் மூலம் அரசியல் மாற்றத்தைக் கொண்டுவர முயற்சிப்பது என்பதுதான் 1948—51 காலகட்ட நடவடிக்கைகளில் ஏற்பட்ட மிக முக்கியமான தவருகும். இந்தத் தவறை மீண்டும் செய்தல் கூடாது என்பதில் வேறு எவரைக்காட்டிலும் மிகுந்த அக்கரை இடதுசாரிக் கம்யூனிஸ்ட்களுக்குண்டு. போராட்ட மார்க்கங்கள், அதற்கான ஸ்தாபன அமைப்பு எல்லாம் உழைக்கின்ற மக்களுடைய மனோபாவத்தையும் அரசியல் போதத்தையும் அடித்தளமாகக் கொண்டிருக்க வேண்டும்என்ற மார்க்ஸிஸ-லெனினிஸ தத்துவத்தில்தான் இடதுசாரிக் கம்யூனிஸ்ட்கள் உறுதியாக நிற்கின்றனர். இந்த அடிப்படையில் இந்தக் காலகட்டத்தில் கம்யூனிஸ்ட் கட்சி செய்ய வேண்டிய கடமைகளை முக்கியமாக இரண்டு பகுதிகளாகப் பிரிக்கலாம்.

1, விலைவாசி உயர்வு, வரி நிலைமை, போனஸ் பிரச்சினை சம்பள உயர்வு, குத்தகை, நில வெளியேற்றம், முதலிய பொருளாதாரப் பிரச்னைகளுக்குத் தீர்வு காண்பதற்கு வேண்டி வெகுஜன ஸ்தாபனங்களைப் பலப்படுத்தி எதிர்ப்புக்கள் தெரிவிப்பது, போராட்டங்கள் நடத்துவது, இதற்குத் தேவையான ஸ்தாபன ரூபங்களும் போராட்ட முறைகளும் சம்மந்தப்பட்ட வெகுஜனப் பகுதிகளுடைய ஜனநாயக ரீதியான தீர்மானத்தை அனுசரித்து இருக்க வேண்டும் என்று உறுதிப்படுத்துதல்.

2. தேர்தல்கள் அக்கிரமத்துக்கெதிரான போராட்டங்கள் முதலிய அரசியல் போராட்டங்களை ஆதாரமாகக்கொண்டு பல வர்க்க வெகுஜன ஐக்கியத்தைப் பலப்படுத்துதல். இதற்கு வேண்டிய ஐக்கிய முன்னணியை எல்லா கட்டத்திலும் உருவாக்குதல்.

இந்த இரண்டு கடமைகளையும் நிறைவேற்ற வேண்டும் என்று முயற்சிசெய்யும் ஒரு பகுதியினர் 1948—51 கால கட்டத்தைப் போல அதி தீவிரப் போக்கில் ஈடுபடப் போகின்றனர் என்று குற்றம் சாட்டுபவர்களைப் பற்றி என்ன சொல்லுவது? இவர்கள் என்ன சொல்லுகின்றனர் என்பதைக் காட்டிலும் முக்கியமான கேள்வி என்னவெனில், எதற்காக வேண்டி இவ்வாறு அவதூறு பொழிகின்றனர் என்பதேயாகும். விலைவாசி உயர்வு முதலிய பொருளாதாரப் பிரச்சினைகளையும், ஜனநாயக இயக்கத்தில் சம்பந்தப்பட்ட தேர்தல் முதலிய அரசியல் பிரச்னைகளையும் அடிப்படையாகக்கொண்டு ஒன்றுபட்ட வெகுஜன இயக்கங்களை உருவாக்குவதற்கு, இவர்கள் எதிராக இருப்பதால்தான் என்னவோ, இப்படிபட்ட அவதூறுகளை அவர்கள் அவிழ்த்து விடுகின்றனர் என்று கேட்கவேண்டியிருக்கிறது.

காங்கிரஸ்-கட்சியின் ஏகபோக ஆதிக்கத்தைத் தகர்த்தெறிவதற்கு வேண்டி கம்யூனிஸ்ட் கட்சியில் உள்ள இடதுசாரிகள்—வலதுசாரிகள்; மற்றும் இடதுசாரி எண்ணம் கொண்ட ஜனநாயக வாதிகள் உள்ளிட்ட ஐக்கிய முன்னணி உருவாக்கப்பட வேண்டும். என்ற நோக்கத்தை எதிர்ப்பவர்கள்தான் இடதுசாரிக் கம்யூனிஸ்ட்களுடைய அதிதீவிரப் போக்குப் பற்றி ஒப்பாரி வைக்கின்றனர் என்பது இதில் தெளிவாகத் தெரிகிறது இப்படிப்பட்டதோர் ஐக்கிய முன்னணியின் அவசியம் உள்ள கேரளம் போன்ற ராஜ்யங்களில் அப்படிப்பட்டதோர் ஐக்கிய முன்னணி ஏற்படவிடாமல் தகர்த்தெறிவதற்கு வேண்டிய சகலவிதமான தந்திரோபாயங்களையும் கைக்கொள்ளுபவர்கள்தான் — அத்தகைய தந்திரத்தின் ஒரு பகுதியாக, இந்த அவதூறுப் பிரச்சாரத்தையும் அவிழ்ந்துவிடுகின்றனர்.

மேலும் கூறப்போனல் 1948-51 காலகட்டத்தில் கம்யூனிஸ்ட்கள் கைக்கொண்ட போராட்ட மார்க்கத்தில் உள்ள தவறுகளைச் சுட்டிக்காட்டுவதுடன், அந்தக் கால கட்டத்தில் அரசாங்கமும், ஆளும் கட்சியும் கைக்கொண்ட ஜனவிரோத நடவடிக்கைகளையும் அவிழ்த்துவிட்ட அடக்குமுறைகளையும் தைரியமாக எடுத்துக் கூறவேண்டியது ஒவ்வொரு கம்யூனிஸ்டுனுடைய கடமையாகும். இது வரையில் கம்யூனிஸ்ட் கட்சி இவ்வாறுதான் செய்து வந்தது. ஆனல் கட்சியின் இன்றைய வலது சாரியினருக்கு 1948—51 கால கட்டத்தில் காங்கிரஸ் கட்சியும் அரசாங்கமும் கைக்கொண்ட ஜனதுரோகப் போக்கையும் அவிழ்த்துவிட்ட அடக்குமுறையைப் பற்றியும் ஒன்றும் சொல்வதற்கில்லை போலும். மிக மிக நியாயமாக, ஜனநாயக ரீதியில் ஆட்சி நடத்திக்கொண்டிருந்த ஒரு அரசாங்கத்துக்கு எதிராகத் துப்பாக்கி தூக்குபவர்கள் கம்யூனிஸ்டுகள் என்ற காங்கிரஸ்காரர்களுடைய வாதத்தையும், குற்றச்சாட்டையும் நியாயப்படுத்தும் முறையில் இருக்கிறது இவர்களுடைய நடவடிக்கைகள். லால்பகதூர் சாஸ்திரி பிரதமராக தேர்ந்தெடுக்கப்பட்டது இந்திய ஜனநாயகத்துக்கு மிகவும் திருப்திதரக்கூடிய ஒன்ருகும் என்று தம்பட்டமடித்துக்கொண்டு திரிபவர்கள், 1948—51 காலகட்டத்தில் அவிழ்த்துவிடப்பட்ட அடக்குமுறையை மூடி மறைத்துவைத்துக்கொண்டு அன்று கம்யூனிஸ்ட் கட்சி கைக்கொண்ட நடவடிக்கையில் காணும் தவறுகளை மட்டும் ஒரு தலைப்பட்சமாகத் திரித்துக் கூறுவதைக் கண்டு ஆச்சரியப்படுவதற்கில்லை.

மூலம்: தேசாபிமானி
தமிழில்: மணியன்

---

# தோழர் ராமதாஸை கைதுசெய்தது அரசாங்கத்தின் சூழ்ச்சியே!

## அவரை விடுதலை செய்யக்கோரி தோழர்கள் எம். பசவபுன்னையா, பி. ராமமூர்த்தி, ஏ. கே. கோபாலன் விடுத்த அறிக்கை

"இந்தியப் பாதுகாப்புச் சட்டத்தின்கீழ் தோழர் ராமதாஸை கைது செய்துள்ளதானது, காங்கிரஸ் ஆட்சியாளர்கள் குறுகிய அரசியல் நோக்கங்களுக்காக, பாதுகாப்புச் சட்டத்தை (D.I.R.) எவ்வாறு தவருகப் பயன்படுத்துகிருர்கள் என்பதற்கு மற்றுமோர் தெளிவான நிருபணமாகும்.

"இந்த நாட்டில் உள்ள பொதுமக்களின் ஜனநாயக ரீதியான அபிப்பிராயம், அவசரகாலச் சட்டத்தை ரத்து செய்யப்பட வேண்டும் என்றும் எல்லா பாதுகாப்புக் கைதிகளையும் விடுதலை செய்யவேண்டும் என்றும் வற்புறுத்திக்கொண்டிருக்கும் நேரத்தில், பாதுகாப்புச் சட்டத்தைப் பயன்படுத்தி புதிய கைது நடவடிக்கைகளுக்கு உத்திரவிடுவது எல்லோரையும் மேலும் அதிர்ச்சிக்குள்ளாக்கியுள்ளது தோழர் ராமதாஸ் அரசிற்குப் பாதகமான நடவடிக்கைகளில் ஈடுபட்டதாகவும் அதன் காரணமாக அவர் கைது செய்யப்பட்டுள்ளார் என்ற குற்றச்சாட்டை கேட்கும்போது கேலிக்கூத்தாகப்படுகிறது. உண்மை நமக்குத் தெரியும். தோழர் ராமதாஸ் 1961-ம் ஆண்டில் விஜயவாடா மகாநாட்டிற்குப் பிறகு டாங்கேகுழுவின் வலதுசாரி சீர்திருத்தவாதக் கொள்கைகளை முழுமையாக நிராகரித்து நியூ ஏஜ் வார ஏட்டின் ஆசிரியர் குழுவிலிருந்து ராஜினுமா செய்துவிட்டார். அதிலிருந்து அவர் அகில இந்திய விவசாயிகள் சங்கப் பணிகளில் தோழர் ஏ. கே. கோபாலனுக்கு உதவியாக இருந்து வந்துள்ளார். பின்னர் டாங்கேயின் திரிபுவாத கூட்டத்திற்கும் அவர்களது வர்க்க சமரசக் கொள்கைக்கும் எதிராக நடக்கும் உட்கட்சிப் போராட்டத்திற்கு உதவியாக நமது மத்திய அலுவலகத்தின் நிர்வாகியாகச் செயலாற்றிவருகிருர். இதற்காக அவரின்மீது மோசமான அவதூறுக் குற்றச்சாட்டுகள் உள்ள தஸ்தாவேஜுகளை தேசியக் கவுன்ஸிலில் வினியோகித்த வலதுசாரித் தலைவர்களான இஜட். ஏ. அகமது போன்றவர்களின் வெறுப்பைச் சம்பாதித்துக்கொண்டார். கட்சியின் ஏழாவது மாநாட்டுக்கான தயாரிப்புகளிலும் கம்யூனிஸ்ட் கட்சியை டாங்கே கம்பெனியின் கைகளிலிருந்து காப்பாற்றுவதற்காகவும் நாம் வேலைகளில் ஈடுபட்டிருக்கும்போது மத்திய அலுவலகத்தின் நிர்வாகியான தோழர் ராமதாஸை கைது செய்ய அரசாங்கம் உத்திரவிட்டிருப்பதானது சூழ்ச்சிகரமாக இருக்கிறது.

தோழர் ராமதாஸ் ஈடுபட்டுள்ள சேவை அரசிற்கு எவ்விதத்திலும் பாதகமானதல்ல; மாருக நம் நாட்டின் சுரண்டும் கும்பல்களின் பிற்போக்கான கொள்கைகளுக்கெதிராக, ஜனநாயகப் புரட்சிகர இயக்கத்திற்கு தோழர் ராமதாஸ் தன்னுடைய சக்திக்கேற்றவாறு பணியாற்றி வந்துள்ளார் என்பதுதெளிவு.

அவர் கைது செய்யப்பட்டிருப்பதை நாங்கள் பலமாகக் கண்டிக்கிறேம்; அவரை உடனடியாக விடுதலை செய்ய வேண்டுமென்று நாங்கள் கோருகிறேம்.

## உலக கம்யூனிஸ்ட் இயக்கத்தில் எழுந்துள்ள கருத்து வேறுபாடுகளும்

# சோவியத் கட்சி - சீனக் கட்சிகளுக்கு

[சர்வதேச கம்யூனிஸ்ட் இயக்கத்தின் ஒற்றுமை, உலக கம்யூனிஸ்ட் கட்சிகளின் மாநாடு கூட்டுவது ஆகியவை பற்றியும், பகிரங்க சர்ச்சைகளை நிறுத்தும் பிரச்சினை பற்றியும் சோவியத் கம்யூனிஸ்ட் கட்சிக்கும் சீனக் கம்யூனிஸ்ட் கட்சிக்குமிடையே சமீப காலத்தில் நடைபெற்றுள்ள கடிதப்போக்குவரத்துக்களின் சுருக்கம் இங்கு தரப்படுகிறது. இதன் தொடர்ச்சி அடுத்த இதழில் வெளியிடப்படும்.

ஆசிரியர்.]

## சோவியத் கடிதம்

**தோழர் மா-சே-துங்கிற்கு**

சீனக் கம்யூனிஸ்ட் கட்சி மத்திய கமிட்டிக்கு—

அன்பார்ந்த தோழர்களே !

சர்வதேச கம்யூனிஸ்ட் இயக்கத்தின் அடிப்படைக் கொள்கைகள் சம்பந்தமாக மார்க்ஸிஸ்ட்-லெனினிஸ்ட் கட்சிகள் தயாரித்துள்ள தஸ்தாவேஜுகள் சமீபத்தில் கம்யூனிஸ்ட் பத்திரிகைகளில் வெளியாகியுள்ளன. வேற்றுமைகள் கடுமையாகியுள்ளன என்பதையும் பகிரங்க சர்ச்சைகள் மார்க்ஸிஸ்ட்-லெனினிஸ்ட் கட்சிகளின் உறவுக்குப் பொருந்தாத ரீதியில் வளர்ந்துள்ளன என்பதையும் மறைக்க விரும்பவில்லை.

இந்த நிலைமை எங்களுக்கு மிகுந்த கவலை அளிக்கிறது. சீன-சோவியத் கட்சிகளிடையேயுள்ள விபரீத உறவு கம்யூனிஸ்ட் சக்திகளிடையே பிளவை உண்டுபண்ணுகிறது.

உலகின் மிகப் பெரிய இரு நாடுகளின் கட்சிகளிடையே இந்தச் சர்ச்சை நடந்தாலும் நம் வேலைகள் தொடர்ந்து நடைபெற முடியும். ஆனால் கம்யூனிஸ்ட் இயக்கத்திற்கு ஏற்படும் தீங்கை கவனிக்க நாம் தவறக் கூடாது.

எல்லா தேசங்களிலுமுள்ள கம்யூனிஸ்டுகள் ஒற்றுமையை விரும்புகிறார்கள்.

வேற்றுமைகள் உள்ள பிரச்சினைகளில் தீவிர கவனம் செலுத்துவது சரியல்ல என்று கருதுகிறோம். சாதகமான துறைகளில் ஒத்துழைப்பை வளர்க்கவேண்டும். அந்த ஒத்துழைப்பு சோவியத் யூனியன், சீனா நன்மைக்காக மட்டுமின்றி சோஷலிஸ சமூக முழுதின் நன்மைக்காகவும் இருக்கும்.

இக் கடிதத்தில் இதற்கான நடைமுறை சாத்தியமான சில திட்டங்களைக் கூற விரும்புகிறோம்.

சீனக் கட்சியும் இத்துறையில் நடவடிக்கை எடுக்கும் என்று எதிர்பார்க்கிறோம். சீனப் பிரதமர் சூ-என்-லாயும் சமீபத்தில் நிருபர்களிடம் பேசுகையில் சோவியத் யூனியனுடனும் மற்ற சோஷலிஸ்ட் நாடுகளுடனும் தொடர்புகளை வளர்க்க விரும்புவதாகக் கூறியுள்ளார்.

அடுத்த சில வருடங்களில் இரு நாடுகளின் நலன்களுக்கும் உகந்த முறையில் வர்த்தகத்தை அதிகரிக்க முடியும்.

1962 மே 13ல் செய்துகொண்ட ஒப்பந்தம் இதற்கான ஏற்பாட்டைப் புதுப்பிக்க வகை செய்கிறது. உங்கள் தரப்பில் அக்கறை காட்டினால் சீனாவுக்கு தொழில் நுட்ப உதவியை விரிவுபடுத்தவும் தொழிற்சாலைகள் அமைக்கவும் குறிப்பாக பெட்ரோலியம், சுரங்கத் தொழிற்சாலைகள் அமைக்கவும் இரு நாடுகளுக்கும் பரஸ்பர நன்மையான மற்ற தொழில்களை அமைக்கவும் இயலும்.

சீனாவுக்கு சோவியத் நிபுணர்களை அனுப்ப மீண்டும் எங்கள் சம்மதத்தைத் தெரிவிக்கிறோம்.

1966-70க்கான ஐந்தாண்டு திட்டத்தை சோவியத் யூனியன் இப்போது தயாரித்துக்கொண்டிருக்கிறது. சீனாவும் தன் மூன்றாவது ஐந்தாண்டுத் திட்டத்தை வகுத்துக்கொண்டிருக்கிறது. இதனால் வர்த்தகத்தையும் மற்ற தொடர்புகளையும் வளர்ப்பது பற்றி விவாதிக்க இது நல்லசமயம்.

பொருளாதாரத் தொடர்புகள் பற்றிய ஒத்துழைப்பில்தான் எல்லா நாடுகளும் குறிப்பாக அக்கறை கொண்டுள்ளன. சமாதானச் சகவாழ்வுக் கொள்கையையும் நாடுகளிடையே உறவையும் வளர்க்க அது தகுந்த சூழ்நிலையைத் தோற்றுவிக்கிறது. சோஷலிஸ்ட் நாடுகளிடையே பொருளாதாரத் தொடர்புகள் இருக்கவேண்டியது மேலும் அவசியமாகும். சோஷலிஸத்தையும் கம்யூனிஸத்தையும் நிர்மாணிப்பதற்கும் சர்வதேச சோஷலிஸ வேலைப் பிரிவின் அனுகூலத்தைப் பெறுவதற்கும் இத்தகைய தொடர்புகள் முக்கியமாகும். இந்த ஒத்துழைப்பால் சீனாவுக்கும் சோவியத் யூனியனுக்கும் சோஷலிஸ்ட் முகாமுக்கும் உலக சோஷலிஸ லட்சியத்துக்கும் லாபமாகும்.

ஒவ்வொரு தேசமும் பிரதானமாகத் தன் சொந்த சக்தியை நம்பியே சோஷலிஸத்தையும் கம்யூனிஸத்தையும் நிர்மாணிக்கும் என்பதை அறிவோம். ஏனெனில் அந்தந்த நாட்டவரேதான் சோஷலிஸத்தைக் கட்ட முடியுமேயொழிய வேறு யாரும் புகுத்த முடியாது. சோவியத் யூனியனுக்கும் சீனாவுக்கும் இடையே பொருளாதார ஒத்துழைப்பு குறைந்தது வருந்தத்தக்கது.

சமீப வருடங்களில் சோவியத்-சீன எல்லையின் வெவ்வேறு பகுதிகளில் எழுந்த நிலைமை சாதாரணமானது அல்ல என்று நீங்கள் ஒப்புக்கொள்ளக்கூடும். தற்போதைய தப்பபிப்பிராயங்கள் நீங்கும் முறையில் எல்லையைச் சரிவர வரையறுக்க சிநேக முறையில் பேச்சு நடத்த சோவியத் சர்க்கார் ஏற்கனவே யோசனை தெரிவித்துள்ளது. சமீபத்தில் நீங்களும் பேச்சுவார்த்தை அடிப்படையில் தீர்வுகாண ஆதரவு தெரிவித்துள்ளீர்கள்.

சீனாமீது சுமத்தப்பட்ட நியாயமில்லாத ஒப்பந்தங்கள் பற்றியும் ஜார் சர்க்காரின் ஆக்கிரமிப்புக் கொள்கை பற்றியும் சமீபத்தில் சீனாவில் அறிக்கைகள் வெளியிடப்பட்டுள்ளன. அண்டை நாடுகளுடன் எல்லையை ஜார்கள் ஒருதலைப்பட்சமாக நிர்ணயித்ததை நாங்கள் ஆதரிக்கமாட்டோம். அதேமாதிரி நீங்களும் சீனச் சக்கரவர்த்திகள் ஆயுத பலத்துடன் மற்றவர்களுக்குச் சொந்தமான பல பிரதேசங்களை அபகரித்ததை ஆதரிக்கமாட்டீர்கள் என்று நம்புகிறோம். அதே சமயம் சரித்திர ரீதியாக ஏற்பட்டுள்ள இப்போதைய எல்லைகளை நாம் அலட்சியப்படுத்த முடியாது. அவ்வாறின்றேல் குழப்பங்களும் தகராறுகளும் விளையும். தொழிலாளி வர்க்கம் ஆட்சியில் இருக்கும்போது நம் பொது லட்சியம் கம்யூனிஸமாக இருக்கும்போது தேச எல்லைகள் பழைய முக்கியத்துவத்தை இழந்திருக்கும் நிலையில் செயற்கையாக எல்லைப் பிரச்சினைகளைத் தோற்றுவிப்பது அர்த்தமற்றதாகும்.

இந்தச் சிக்கலான நிலையிலும் நிலைமையைக் கட்டுமீறி போக முடியாமல் தடுக்கமுடியும் என்று கருதுகிறோம். சோவியத் கம்யூனிஸ்ட் கட்சி பகிரங்க சர்ச்சையை நிறுத்தலாம் என்று எத்தனையோ தடவை முறையிட்டுக் கொண்டது. 1963 அக். 25, நவ. 7-ந் தேதிகளிலும் திரும்பவும் வேண்டுகோள் விடுத்தது. சோவியத் பத்திரிகைகள் சர்ச்சைக்கிடமான விஷயங்களைப் பிரசுரிப்பதை நிறுத்திவிட்டன. அதேமாதிரி சீனக் கட்சியும் செய்யவேண்டும் என்று இக் கடிதத்தின் வாயிலாக மீண்டும் அழைக்கிறோம்.

சோஷலிஸ சமுதாயத்தின் ஐக்கியத்தையும் முதலாளித்துவத்துக்கு எதிரான போராட்ட முன்னணியையும் கட்டவேண்டிய தலையாய பணியை கம்யூனிஸ்டுகள் ஒரு கணமும் மறந்துவிடலாகாது.

சோவியத் கம்யூனிஸ்ட் கட்சியும் சோவியத் மக்களும் சீன மக்களையும் சீன கம்யூனிஸ்ட் கட்சியையும் நேசிக்கிறார்கள். நிலைமையைத் திருத்தவும் ஐக்கியத்தைப் பலப்படுத்தவும் அவர்கள் உறுதி பூண்டுள்ளார்கள்.

இதற்காக சீனக் கட்சியும் அதன் பங்கைச் செய்யவேண்டும் என்று சோவியத் கம்யூனிஸ்ட் கட்சி மத்தியக் கமிட்டி கேட்டுக் கொள்கிறது.

**என். எஸ். குருச்சேவ்**
சோவியத் கட்சியின்
மத்திய கமிட்டிக்காக
(1963, நவம். 29.)

## சோவியத் கட்சிக்கு சீனக் கடிதம்

அன்புள்ள தோழர்களே,

சமீபத்தில் சோவியத் கம்யூனிஸ்ட் கட்சி சகோதரக் கட்சிகளுக்கு ஒரு கடிதம் அனுப்பியுள்ளது என்று பல வட்டாரங்களிலிருந்து தெரியவந்தது. இக் கடிதம் சீனக் கட்சிக்கு அனுப்பப்படாமல் ரகசியமாக வைக்கப்பட்டுள்ளது.

பகிரங்கச் சர்ச்சையை நிறுத்த வேண்டும் என்று கூறுகிற அதே சமயத்தில் முதுகுக்குப் பின்னால் சீனக் கட்சிக்கு எதிரான நடவடிக்கையில் சோவியத் கட்சி ஈடுபடுகிறது. சோவியத் தலைவர்கள் பகிரங்கமாகச் சொல்வது ஒன்றும் தனிப்பட்ட முறையில் செய்வது பிறிதொன்றுமாக இரட்டை வேஷம் போடுகிறார்கள்.

பிளவை உண்டுபண்ணும் சோவியத் தலைவர்களின் இந்த நடவடிக்கை அவர்கள் சூழ்ச்சியை வெட்டவெளிச்சமாக்குகிறது.

அக் கடிதத்தை அனுப்புமாறு மீண்டும் கோருகிறோம். அதை ஆராய்ந்தபின் பதில் அனுப்புகிறோம்.

**மத்தியக் கமிட்டி**
**சீனக் கம்யூனிஸ்ட் கட்சி.**
1964 பிப். 20.

* * *

## சீனக் கட்சிக்கு சோவியத் கடிதம்

அன்பார்ந்த தோழர்களே !

உங்களுடைய பிப்ரவரி 20-ம் தேதி கடிதம் கிடைத்தது. அதன் முரட்டுத்தனமான தொனியும் அவதூறான நடையும் பதிலளிப்பதற்கே எங்களைத் தார்மீக ரீதியாகக் கட்டுப்படுத்தவில்லை. எனினும் விஷயம் தெரியாதவர்கள் தவறாகப் புரிந்துக்கொள்ளக் கூடாது என்பதற்காகப் பதில் அளிக்கிறோம்.

இவ்வாண்டு பிப். 12-ம் தேதி மற்ற சகோதரக் கட்சிகளுக்கு அனுப்பிய கடிதத்தை நாங்கள் உங்களுக்கு அனுப்பாததற்காக சீறுகிறீர்கள். உண்மை நிலை என்ன ? அக் கடிதத்தை உங்களுக்கு அனுப்பாதது தற்செயலாக நடந்தது அல்ல. கடந்த பல மாதங்களாக சர்வதேச கம்யூனிஸ்ட் இயக்கத்தின் ஒற்றுமையைப் பலப்படுத்த கூட்டு நடவடிக்கை எடுக்க வேண்டும் என்று திரும்பத் திரும்ப உங்களுக்குக் கூறிவருகிறோம். இந்த யோசனைக்குப் பதில் அளிப்பதுகூட அவசியம் என்று நீங்கள் கருதவில்லை. நேரிடையாக அணுகிய போதிலும் நீங்கள் பதில் அளிக்கவில்லை. பிப். 12-ம் தேதி மற்ற கட்சிகளுக்கு எழுதிய கடிதத்தில் உங்களிடம் விவாதித்த அதே பிரச்சினைகள்தான் குறிப்பிடப்பட்டிருப்பதை நீங்கள் எளிதில் அறிந்துகொள்ள முடியும்.

எங்கள் கடிதங்களுக்குப் பதில் அளிக்காத அதே சமயத்தில்

சோவியத்—சீன எல்லைத் தகராறு, வர்த்தகம், உதவி பற்றிய வேறுபாடுகளும்

# இடையே நடந்த கடிதப்போக்குவரத்து

சோவியத் கட்சிக்கு எதிராக சர்வதேச கம்யூனிஸ்ட் இயக்கத்தில் பிளவு நடவடிக்கையில் இறங்கியுள்ளீர்கள்.

இந்த நிலையில் கம்யூனிஸ்ட் இயக்கத்தின் ஒற்றுமையைக் கருதி பிப்ரவரி பிளீனம் கூட்டத்தில் விவாதிப்பது அவசியம் என்று கருதினோம். இதைப்பற்றி சகோதரக் கட்சிகளுக்கும் அறிவிக்கத் தீர்மானித்தோம்.

போட்டி முகாம் அமைக்கும் சீனத் தலைமையின் திட்டத்தைப் பற்றியே பிப்ரவரி 12-ம் தேதி கடிதத்தில் விவாதிக்கப்பட்டுள்ளது.

பிப்ரவரி 12-ம் தேதி கடிதத்தில் கூறப்பட்டுள்ள எங்களுடைய கொள்கை ரீதியான நிலை வெகு காலத்துக்கு முன்பே உங்களுக்குத் தெரியும்.

எங்களுடைய கருத்துக்களையும் நடவடிக்கைகளையும் சீனக் கட்சி உள்ளிட்ட எந்த சகோதரக் கட்சிக்கும் மறைக்கவில்லை.

4 ஆண்டுகளாக சகோதரக் கட்சிகள் சீனக் கட்சியிடம் தவறான பொது வழியை உலக கம்யூனிஸ்ட் இயக்கத்தின்மீது சுமத்த வேண்டாம் என்று வேண்டுகோள் விடுத்துவருகிறது. ஆனுல் அதற்கு சீனத் தலைமை செவி சாய்க்கவில்லை. முதலாளித்துவ நாடுகளிலுள்ள கம்யூனிஸ்ட் கட்சிகளுக்கு எப்போது புரட்சியைத் தொடங்கவேண்டும், எந்த வழியில் அதை அடையவேண்டும் என்று சீனத் தலைமைதான் உத்தரவிட முயன்றுகொண்டிருக்கிறது. எந்த நாட்டை சோஷலிஸ்ட் நாடாகக் கருதவேண்டும், எதை சோஷலிஸ்ட் நாடாகக் கருதக்கூடாது என்று சீனத் தலைமையே அப்பீல் செய்வதற்கு அனுமதிகூட கொடுக்காமல் தீர்ப்புக் கூறுகிறது.

பெரிய நாடு என்ற மமதை உங்கள் கடிதத்திலும் பிரதிபலிக்கிறது. பிப்ரவரி 12-ம் தேதி கடிதத்தை அனுப்புமாறு வேண்டுகோள் செய்யாமல் கட்டளையிட்டுள்ளீர்கள். யாரும் உங்கள் தொனியின் கடுமைக்கு நடுங்கி உங்கள் கோரிக்கையை நிறைவேற்ற தலைதெறிக்க ஓடிவருவார்கள் என்று கருதுகிறீர்களா? இது முரட்டுத்தனம் மட்டுமின்றி கேலிக்கூத்துமாகும்.

உங்கள் கடிதம் எந்த நோக்கத்தில் அனுப்பப்பட்டது? நட்பைப் பலப்படுத்த அது அனுப்பப்பட்டது என்று யாரும் நம்பமாட்டார்கள்.

கம்யூனிஸ்ட் இயக்கத்தின் ஒற்றுமையை சீனத் தலைவர்கள் உண்மையில் விரும்புவார்களானுல் அவர்களுடைய தவறான பாதையை விட்டுவிடவேண்டும்.

சோவியத் கட்சி தன்னைப் பொறுத்தவரை மார்க்ஸிஸ—லெனினிஸக் கொள்கை அடிப்படையில் ஒற்றுமையைக் கட்ட இயன்றதனைத்தையும் செய்யத் தயாராக இருக்கிறது.

**மத்தியக் கமிட்டி**
**சோவியத் கம்யூனிஸ்ட் கட்சி.**
*(1964 பிப். 22.)*

## சோவியத் கட்சிக்கு சீனக் கட்சியின் கடிதம்

அன்பார்ந்த தோழர்களே !

பிப்ரவரி 22-ம் தேதி கடிதம் கிடைத்தது. 'முறைகேடானது', 'குற்றத்தை பிறர்மீது சுமத்துவது' 'முரட்டுத்தனமானது' 'கேலிக்கிடமானது' என்ற வழக்கமான வார்த்தைகளை பிரயோகித்து உண்மையான பிரச்னைகளிலிருந்து நழுவுகிறீர்கள்.

உண்மைத் திருடன் 'திருடனைப் பிடி' என்று கத்துகிறுன் என்பதாக எங்களை நீங்கள் குற்றம் சாட்டுகிறீர்கள். ஆனுல் இந்த வேலையை நீங்களே செய்கிறீர்கள். கீழ்வருவதை நீங்கள் மறுக்க முடியாது. எங்கள் முதுகுக்குப் பின்னுல் தங்களுக்கு எதிராக கூட்டு நடவடிக்கை எடுக்க திட்டமிடுகிறீர்கள்.

பிப். 20-ம் தேதி கடிதத்தில் நீங்கள் பிளவு நடவடிக்கையில் ஈடுபடுவதாகவும் 'தந்தை கட்சி' என்ற நிலையை வகுப்பதாகவும் குறிப்பிட்டோம். உங்களுடைய சமீப கடிதம் இதை நிரூபிக்கிறது. பதிலளிக்காமலிருக்க உரிமையுண்டு என்ற அழுத்தத்துடன் உங்கள் கடிதம் தொடங்குகிறது. ஆனுல் உங்கள் 1963 நவ. 29-ம் தேதி கடிதத்துக்கு நாங்கள் பதில் அனுப்புவதாக கூறியுள்ளோம்.

உங்கள் தவறுகளைத் திருத்திக் கொள்வதற்குப் பதில் உண்மையை மறுக்கிறீர்கள். எங்களுக்கு எதிரான சாட்சியமாக பெலிஷோவா விவகாரத்தைக் குறிப்பிட்டுள்ளீர்கள். நீங்கள்தான் பெலிஷோவாவை சோஷலிஸ்ட் முகாமைப் பிளக்கும் நாசவேலையில் ஈடுபடுத்தினீர்கள். இதை புகாரஸ்ட் கூட்டத்தில் 1960 ஜூன் 24-ம் தேதி குருச்சேவ் முன்னிலையிலேயே அல்பேனிய தூது கோஷ்டித் தலைவர் தோழர் காபோ வெளிப்படுத்தினுர்.

எனினும் தஸ்தாவேஜுகளை பிரசுரிக்கப்போவதாகவும் பகிரங்கமாகக் கருத்தை வெளியிடப் போவதாகவும் உங்கள் கடிதத்தில் கூறியுள்ளீர்கள். இம்மாதிரி தந்திரங்களை போதிய அளவு நீங்கள் முன்பே செய்துபார்க்கவில்லையா? சோவியத் கட்சியின் 20-வது காங்கிரசிலிருந்து பல வற்றை நாங்கள் தொகுத்துக் கூற முடியும்.

நீங்கள் உண்மைக்கு அஞ்சாவிட்டால், சமத்துவ அடிப்படையில், இரு கட்சிகளும் தங்களின் கட்டுரைகளை இரண்டு நாடுகளிலும் பிரசுரிக்க உடன்பாட்டுக்கு வாருங்கள். பிப். 12-ம் தேதி கடிதத்தை அனுப்புமாறு வேண்டுகோள் விடுவதற்குப் பதில் கட்டளையிட்டிருப்பதாக குற்றம் சாட்டியுள்ளீர்கள். சீன மொழியில் இந்த இரு வார்த்தைகளும் ஒரே அர்த்தத்தில் பயன்படுத்தப் படுகின்றன. எனினும் அதை நீங்கள் பெரிதாக எடுத்துக் கொண்டதால் கடிதத்தை அனுப்புமாறு வேண்டுகோள் விடுக்கிறோம்.

**சீனக் கம்யூனிஸ்ட் கட்சி**
**மத்தியக் கமிட்டி.**
*1964, பிப். 27.*

* * *

## சோவியத் கட்சி கடிதத்திற்கு சீனக் கட்சியின் பதில்

அன்பார்ந்த தோழர்களே !

1963 நவம்பர் 23-ம் தேதியிட்ட உங்கள் கடிதத்திற்கு எங்களுடைய பதிலாக இக்கடிதம் அனுப்பப்படுகிறது.

சர்வதேச கம்யூனிஸ்ட் இயக்கத்தின் ஒற்றுமையைப் பாதுகாப்பதையும் பலப்படுத்துவதையும், சீனக் கட்சி தன் புனிதக் கடமையாகக் கொண்டுள்ளது.

எல்லா நாடுகளின் கம்யூனிஸ்டுகள் ஒற்றுமை ஒருபொழுது போக்கு சங்கத்தின் ஒற்றுமையைப் போன்றதல்ல. மார்க்ஸ், லெனின் ஆகியோருடைய புரட்சிகர போதனையின் அடிப்படையில் தான் இந்த ஒற்றுமையை நிறுவ முடியும். நம்மிடையேயுள்ள வேற்றுமைகள் மார்க்ஸிஸ லெனினிஸக் கொள்கையைப் பற்றியது எனவே கொள்கைப் பற்றிய பிரச்னைகளுக்குத் தீர்வு கண்டு ஒற்றுமையைப் பலப்படுத்த வேண்டும்.

இக்கடிதத்தில் பல பிரச்னைகளில் எங்கள் கருத்துக்களைக் கூற விரும்புகிறோம்.

### சீன—சோவியத் எல்லைப் பிரச்னை

கடந்த காலத்தின் மிச்சசொச்சமான சீன-சோவியத் எல்லைப் பிரச்னையை இரு சர்க்கார்களுக்கிடையே பேச்சு வார்த்தை மூலம் தீர்க்க முடியும் என்று சீனு எப்போதும் கருதுகிறது. அது தீர்க்கப்படும்வரை எல்லையில் தற்போதைய நிலை நீடிக்கவேண்டும் என்று சீனு கருதுகிறது. இதைக் கடந்த 10 ஆண்டுகளாக கடைப்பிடித்து வந்துள்ளோம். சோவியத் சர்க்காரும் இந்நிலையைப் பின் பற்றுமானுல் அமைதியைக் காக்க முடியும்.

சமீப வருடங்களில் சோவியத் தலைவர்களின் சீன எதிர்ப்பு நடவடிக்கைகள் அதிகரித்ததுடன் சோவியத் தரப்பிலிருந்து எல்லையை மீறும் சம்பவங்களும் அடிக்கடி நிகழ்ந்துள்ளன. சீனப் பிரதேசத்தில் விரிந்த அளவில் நாச வேலைகளும் சீன தேசிய இனங்களிடையே பத்திரிகை, ரேடியோ மூலம் வேற்றுமைகளை உண்டுபண்ண முயல்வதும் ஆயிரக்கணக்கான சீனப் பிரஜைகளை சோவியத் யூனியனுக்குள் கடத்துவதும் மிகுந்துள்ளன.

நம் இரு தேசப் பிரதிநிதிகளும் 1964 பிப். 25ல் பீக்கிங்கில் எல்லைப்பிரச்னை மீது பேச்சுத் தொடங்கினர். பழைய ஒப்பந்தங்கள் சமத்துவ ஒப்பந்தங்களாக இல்லாவிட்டாலும் நியாயமான தீர்வுக்கு அதை அடிப்படையாக வைத்துக் கொள்ள சீன சர்க்கார் தயாராக இருக்கிறது. இதே நிலையை சோவியத் தரப்பும் சீன சோவியத் எல்லை நிரந்தர நட்புக்கான எல்லையாக விளங்க முடியும்.

### உதவிப் பிரச்னை

ஸ்டாலின் தலைமையில் தொடங்கிய சோவியத் உதவியை நாங்கள் எப்போதும் பாராட்டி வருகிறோம். சீனுவின் சோஷலிஸ தொழில் மயத்துக்கு சோவியத் மக்களின் சினேக உதவி அஸ்திவாரம் அமைக்கப் பயன்பட்டது என்று எப்போதும் கருதுகிறோம். இதற்காக பல முறை நன்றி கூறியிருக்கிறோம்.

சமீப வருடங்களில் சோவியத் தலைவர்கள் தங்களின் தன்னலமற்ற உதவி பற்றி அடிக்கடி பெருமையடித்துக்கொள்கிருர்கள். ஆனுல் இவ்வுதவி இனுமாகக் கொடுத்தல்ல ; வியாபார ரீதியில் அதைத் திருப்பிச்செலுத்துகிறோம். ரஷ்யாவிலிருந்து நாங்கள் வரவழைக்கும் பல பொருள்களின் விலைகள் உலக மார்கெட் விலையைவிட அதிகம் என்பதையும் இங்கு குறிப்பிடுவது அவசியம்.

ரஷ்யா தந்த கடன்களில் பெரும் பகுதி ரஷ்யாவிலிருந்து யுத்த தளவாடங்கள் வாங்கவே பயன்பட்டது. அந்த யுத்த தளவாடங்கள் கொரியாவில் அமெரிக்க ஆக்கிரமிப்பை எதிர்க்கவே உபயோகிக்கப்பட்டன. அந்த யுத்தத்தில் கொரிய மக்களுடன் சேர்ந்து சீன மக்களும் மிகுந்த தியாகமும் ராணுவச் செலவும் செய்தார்கள். இதற்கான ரஷ்யக் கடன்களுக்கு பலவருடங்களாக அசலும் வட்டியும் செலுத்தி வருகிறோம். இதைக் கூட ரஷ்யா இனுமாகக் கொடுக்கவில்லை.

### சோவியத் நிபுணர்கள் பிரச்னை

சீனுவில் பணிபுரியும் சோவியத் நிபுணர்கள் பெரிதும் மதிக்கப்பட்டனர். ஒருதலைப் பட்சமாக சோவியத் தலைவர்கள் அவர்களை வாபஸ் பெற்றபோது அவர்கள் நீடித்திருக்க வேண்டுமென்று விருப்பம் தெரிவித்தோம். நீங்கள் அதைப் பொருட்படுத்தாது 343 ஒப்பந்தங்களை மீறி 1390 நிபுணர்களை வாபஸ்பெற்றீர்கள். அதனுல் பல முக்கியமான விஞ்ஞான ஆராய்ச்சித் திட்டங்களும் நிர்மாணவேலைகளும் பாதியில் நின்று போயின. பெரிய நஷ்டம் ஏற்பட்டது.

சீனுவின் இயற்கை விளைவித்த நாசங்களைப் பயன்படுத்திக் கொண்டு இந்த நடவடிக்கைகளை நீங்கள் கையாண்டது கம்யூனிஸ்ட் கோட்பாட்டுக்கே முற்றும் மாறுனது. அரசியல் நிர்ப்பந்தங்கள் செய்யவே நிபுணர்களை அனுப்புகிறீர்கள் என்பது உங்கள் நடவடிக்கை மூலம் முற்றும் வெளிப்பட்டு விட்டது.

(6-ம் பக்கம் பார்க்க)

5-ம் பக்கத் தொடர்ச்சி

# சோவியத்—சீனக் கடிதப் போக்குவரத்து...

இப்போது மீண்டும் நிபுணர்களை அனுப்புவது பற்றி யோசனை கூறுகிறீர்கள் சீனமக்கள் மீண்டும் ஏமாற விரும்ப வில்லை. சமத்துவம், பரஸ்பர உதவி, உள்நாட்டு விஷயங்களில் குறுக்கிடாமல் இருப்பது என்ற அடிப்படையில் தான் சோஷலிஸ நாடுகள் தங்களுக்கிடையில் நிபுணர்களை பரிவர்த்தனை செய்து கொள்ள முடியும்- சோவியத் யூனியனின் தற்போதைய பொருளாதார நிலைமை பற்றி பெரிதும் கவலையுறுகிறோம். சில துறைகளில் சீன நிபுணர்கள் உதவி தேவை என்று நீங்கள் கருதினால் மகிழ்வுடன் அனுப்பி வைப்போம்.

### சீன—சோவியத் வர்த்தகம்

கடந்த சில வருடங்களாக சீன சோவியத் வர்த்தகம் குறைந்த தற்கான காரணத்தை யாரையும் விட நீங்கள் நன்கு உணர்வீர்கள்

திடீரென நிபுணர்களை வாபஸ் பெற்றதால் சீனாவின் உற்பத்தி ஏற்பாடுகள் குலைந்து போயிற்று சீனாவுக்குத் தேவையுறாத ஏராளமான சாமான்களை சீனாவின் தலையில் கட்டப்பார்க்கிறீர்கள். தேவையுறும் சாமான்களை நிறுத்திக் கொள்கிறீர்கள். பல வருடங்களாக வர்த்தகத்தை அரசியல் நிர்ப்பந்தங்களுக்கான கருவியாகவும் பயன்படுத்துகிறீர்கள்.

நாங்கள் தனிப்பாதையில் செல்வதாகக் குற்றம் சாட்டுகிறீர்கள். ஆனால் உங்கள் நிலை என்ன ?

மேலும் சோஷலிஸ்ட் நாடுகளுடனுள்ள உறவில் முதலாளித்துவ உலக விதிமுறைகளைப் புகுத்தியுள்ளீர்கள். சோஷலிஸ நாடுகளுக்கிடையில் பொருளாதார உதவிக்கான தற்போதையக் கவுன்சிலில் சோவியத் தலைவர்களின் தனி ஆதிக்கம் நீங்கவேண்டும் என்று கருதுகிறோம்.

### பகிரங்கச் சர்ச்சைகளை நிறுத்தும் பிரச்னை

சோவியத் கம்யூனிஸ்ட் கட்சியின் 22-வது காங்கிரஸிலிருந்து பகிரங்க சர்ச்சையை நீங்கள் கிளப்பியுள்ளீர்கள். இப்படிச் செய்தது 'லெனின் வழி' என்று கூறியுள்ளீர்கள். இது தவறானது. இதனால் சகோதரக் கட்சிகளுக்கு கஷ்டம் ஏற்பட்டது.

பகிரங்க விவாதத்தின் விளைவாக நீங்கள் எதிர்பார்த்ததற்கு மாறான விளைவுகள் ஏற்பட்டுள்ளன. இப்போது அதை நிறுத்தவேண்டும் என்கிறீர்கள் இந்த யோசனையை முதலில் 1962- ஜனவரியில் வியட்னாம் கட்சியும் பின் இந்தோனேஷ்யா, நியூஸிலாந்து கட்சிகளும் கூறின. அந்த யோசனைகளை நாங்கள் ஏற்றோம். ஆனால் நீங்கள் ஏற்கவில்லை, இப்போது நீங்கள் சொன்ன மாத்திரத்திலேயே அதை ஏன் மற்றவர்கள் ஏற்கவேண்டும் ?

உங்களுடைய கடிதத்தில் வேற்றுமையுள்ள பிரச்னைகளில் தீவிர கவனம் செலுத்தாமல் உணர்ச்சி தனியும்வரை காத்திருக்கவேண்டும் என்று கூறியுள்ளீர்கள். இதை 1960 அக். 10-ம் தேதி, 26 கட்சிகளின் நகல் அறிக்கை தயாரிப்புக் கமிட்டி கூட்டத்திலேயே நாங்கள் கூறியுள்ளோம் அப்போது அந்த யோசனையை நீங்கள் திட்டவட்டமாக நிராகரித்தீர்கள். மாஸ்கோவில் நம் மிரு கட்சிப் பிரதிநிதிகளும் பேசிக் கொண்டிருக்கும் போதே எங்கள் ஆலோசனையையும் நிராகரித்து 1963 ஜூலை 14-ல் பகிரங்கக் கடிதத்தைப் பிரசுரித்தீர்கள். 1963 ஜூலை 15-லிருந்து அக்டோபர்வரை சீனாவுக்கு எதிரான 2000 கட்டுரைகளை வெளியிட்டுள்ளீர்கள். செக்கோஸ்லோவேகியா, ஹங்கேரி மங்கோலியா முதலிய நாடுகளின் மற்ற கட்சிகளையும் இவ்விதம் கட்டுரை வெளியிடுமாறு தூண்டியுள்ளீர்கள்.

பல முதலாளித்துவ நாடுகளின் கம்யூனிஸ்ட் கட்சிகளும் எங்களைத் தாக்கியுள்ளன. ஒரு சிலவற்றைத் தவிர அவைகளுக்கெல்லாம் நாங்கள் பதிலளிக்கவில்லை.

மேலும் வார்சாவில் நடைபெற்ற சமாதானக் கவுன்சில் கூட்டம். பிரேகில் நடைபெற்ற உலக தொழிற்சங்க சம்மேளன நிர்வாகக் கமிட்டி கூட்டம் போன்றவற்றில் சர்ச்சைக்கிடமான விஷயங்களை நீங்கள் எழுப்பினீர்கள். இவைகளில் நாங்களும் மற்றவர்களும்சமாதானம் தேசிய விடுதலைப் போராட்டம் ஆகியவற்றிற்கு ஆதரவு திரட்டி அமெரிக்க ஏகாதிபத்தியத்துக்கு எதிராக ஐக்கிய முன்னணி அமைக்க முயன்றபோது நீங்கள் அமெரிக்க ஏகாதிபத்தியத்தை உயர்த்திப் பேசியும் அமெரிக்காவுடன் சேர்ந்து செய்துகொண்ட முத்தரப்பு ஒப்பந்தத்தை தீர்மானங்களில் சேர்க்கக் கோரியும் பிளவை உண்டு பண்ணினீர்கள்.

நம்முடைய வேற்றுமைகள் அடிப்படையானவை. அதனால் கீழ்க்கண்ட கேள்விகள் எழுகின்றன. அமெரிக்க ஏகாதிபத்திய வாதிகள் உலக மக்களின் தீர்மானதான எதிரிகளா ? அல்லது சமாஜனத் தூதர்களா ? அவர்கள் தான் மனித குலத்தின் தலைவிதியை நிர்ணயிக்கும் எஜமானர்களா ?

ஏகாதிபத்திய வாதிகள் உலக யுத்தத்தை உண்டுபண்ணாமல் தடுக்கவும் உலக சமாதானத்தை பாதுகாக்கவும் சிறந்த வழி என்ன ?

இதற்காக உலகம் முழுவதும் தொழிலாளிகள் விவசாயிகள், ஏகாதிபத்திய எதிர்ப்பாளர்கள் ஆகியோரை ஒன்று திரட்டுவதா? அல்லது உலக சமாதானத்தைப் பாதுகாக்க சோவியத் அமெரிக்க கூட்டுறவின் மீது சவல நம்பிக்கைகளையும் வைப்பதா ?

டிட்டோ கும்பல் துரோகிகளா ? தோழர்களா ?

சோஷலிஸ்ட் முகாம் தேவையா அல்லது தேவையில்லையா ? எக் கொள்கையால் அதன் ஒற்றுமையைப் பலப்படுத்தவேண்டும் ? ஒடுக்கப்பட்ட மக்களுக்கு அவர்களுடைய புரட்சிகரமான போராட்டங்களுக்கு நாம் தீவிர ஆதரவு தரவேண்டுமா அல்லது நாம் அவர்களின் புரட்சியை தடை செய்யவேண்டுமா ?

ஸ்டாலின் மகத்தான மார்க்ஸிஸ்ட்-லெனினிஸ்டா அல்லது கொலைகாரரா ?

ஒரு சோஷலிஸ்ட் நாடு தொழிலாளிவர்க்க சர்வாதிகாரத்தை வைத்திருக்க வேண்டுமா அல்லது எல்லா மக்களுக்குமான அரசையும் எல்லா மக்களுக்குமான கட்சியையும் அமைத்து முதலாளித்துவம் மீள வழி வகுக்க வேண்டுமா ?

கடுமையான நடவடிக்கை எடுக்கப்போவதாக நீங்கள் அடிக்கடி பயமுறுத்துகிறீர்கள் இது சம்பந்தமாக எங்களுக்கு நிறைய அனுபவம் ஏற்பட்டிருக்கிறது. அல்பேனியா மீது ராணுவ, அரசியல், பொருளாதார நிர்ப்பந்தம் கொண்டு வந்தீர்கள். சீனாவிடமும் ஒப்பந்தங்களை ரத்து செய்தீர்கள். உங்களுடைய இனிப்பான பேச்சில் மயங்கவும் மாட்டோம். நிர்ப்பந்தத்துக்குப் பணிந்து கோட்பாடுகளை கைவிடவும் மாட்டோம்.

இந்த வேற்றுமைகள் இன்று மிகக் கடுமையாக இருந்தாலும் மீண்டும் ஒற்றுமையைஏற்படுத்தவும் அதை பலப்படுத்தவும் நாங்கள் தயாராக இருக்கிறோம். அதற்குக் கீழ்க்கண்ட திட்டங்களைப் பரிசீலிப்பீர்கள் என்று நம்புகிறோம்.

1) பகிரங்க சர்ச்சையை நிறுத்த சீன, சோவியத் கட்சிகளும், மற்ற சம்பந்தப்பட்ட கட்சிகளும் தங்களுக்குள் பேச்சு நடத்தி ஒரு நியாயமான உடன்பாடு காண நியாயமான திட்டத்தை வகுக்கவேண்டும்.

2) எல்லா கம்யூனிஸ்ட் கட்சிகள் கூட்டத்தை சீனக் கட்சி வரவேற்கிறது. அதற்குப் போதுமான ஆயத்தம் செய்யப்படவேண்டும்; தடங்கல்களும், சிக்கல்களும் அகற்றப்படவேண்டும். இக் கூட்டம் மார்க்ஸிஸ-லெனினிஸ அடிப்படையில் ஒற்றுமைக்கான கூட்டமாக இருக்கவேண்டுமென்பதற்கு எங்களால் இயன்றதனைத்தையும் செய்ய நாங்கள் தயார்.

3) சீன—சோவியத் கட்சிகளிடையே 1964 அக். 10லிருந்து 25 வரை பீக்கிங்கில் மீண்டும் பேச்சுவார்த்தைகள் நடைபெற வேண்டுமென்று ஆலோசனை கூறுகிறோம். சகோதரக் கட்சிகளின் கூட்டத்தை வெற்றிகரமாக நடத்துவதற்கு சோவியத் சீன கட்சிகளிடையே மீண்டும் பேச்சுவார்த்தைகள் நடைபெறுவது அவசியமான தயாரிப்பு நடவடிக்கையாகும்.

4) சீன-சோவியத் கட்சிகளுக்கிடையில் பேச்சுவார்த்தைகள் நடைபெற்ற பிறகு, பின்வரும் 17 கட்சிகளின் பிரதிநிதிகளுடைய கூட்டம் நடைபெறவேண்டுமென்று ஆலோசனை கூறுகிறோம்; உலக கம்யூனிஸ்ட் கட்சிகளின் மாநாட்டை கூட்டுவதற்கு இந்த 17 கட்சிகளுடைய பிரதிநிதிகளின் கூட்டம் மேலும் தேவையான தயாரிப்புகளை செய்யும். அல்பேனியா, பல்கேரியா, சீனா, கியூபா, செக்கோஸ்லாவியா, ஜெர்மன் ஜனநாயகக் குடியரசு, ஹங்கேரி, கொரியா, மங்கோலியா, போலந்து, ருமேனியா, சோவியத் யூனியன், வியட்நாம், இந்தோனேஷியா, ஜப்பான், இத்தாலி, பிரான்ஸ், ஆகிய நாடுகளின் கட்சிகளுடைய பிரதிநிதிகள் கூடி உலக மாநாட்டிற்கு தயாரிப்பு வேலைகளைச் செய்யவேண்டுமென்று ஆலோசனை கூறுகிறோம்.

மார்க்ஸிஸம்-லெனினிஸத்தின் பதாகையின் கீழ் ஒன்றுபடுவோம்.

**சீனக் கட்சியின்**
**மத்தியக் கமிட்டி.**
*1964 பிப். 29.*

# சேலம் மாவட்ட கட்சி மாநாடு செப். 4, 5, 6-ல் நடைபெறுகிறது

## சேலம் மாவட்ட இணைப்புக் குழு கூட்ட முடிவுகள்

சேலம் மாவட்ட இணைப்புக் குழு கூட்டம் 24-7-64ம் தேதி சேலத்தில் நடைபெற்றது. 29 தோழர்கள் அக் கூட்டத்தில் கலந்துகொண்டனர்.

சேலம் மாவட்ட கட்சி மாநாட்டை செப்டம்பர் 4, 5, 6 ஆகிய தேதிகளில் சேலம் நகரில் நடத்துவதென்று கவுன்சில் தீர்மானித்தது. ஆகஸ்ட் மாத இறுதிக்குள் கருப்பூர் பிரதேசம், சீலநாயக்கன் பட்டி ஏரியா, ராசிபுரம், கி.கிரி, எடப்பாடி, சேலம் டவுன், தர்மபுரி, நாமக்கல், வேலூர், திருச்செங்கோடு, மேட்டூர், சூரமங்கலம் ஆகியவிடங்களில் ஸ்தல மாநாடுகளை நடத்தி முடிப்பது என்றும் முடிவு செய்யப்பட்டது.

தோழர் முசாபர்அகமது அவர்களின் பிறந்தநாள் அன்று அவருக்கு வாழ்த்து தெரிவித்து கமிட்டிகள், கிளைகள் தந்திகள் அனுப்புவதென்றும், 2-8-64ம் தேதியன்று அரசியல் கைதிகளை விடுதலை செய்யும்படியும் அவசரகால பிரகடனத்தை ரத்து செய்யும்படியும் கோரி கூட்டங்களில் தீர்மானங்கள் நிறைவேற்றி அரசாங்கத்திற்கு அனுப்புவதென்றும் முடிவு செய்யப்பட்டது.

16-8-64ம் தேதி விலைவாசி உயர்வு எதிர்ப்பு தினத்தன்று சேலம், அரூர். தர்மபுரி, நாமக்கல், சூரமங்கலம், எடப்பாடி ஆகிய இடங்களில் ஆர்ப்பாட்ட ஊர்வலங்கள் நடத்துவதென்றும் முடிவு செய்யப்பட்டது.

சேலம் காலேஜ் அட்மிஷன் பிரச்சினை பற்றியும், சேலம் உருக்குத் தொழிற்சாலை அமைத்தல் பற்றியும், வடசேலத்திற்கு தர்மபுரியை தலைநகராக்குவது பற்றியும், சர்க்கரை வினியோகத்திற்கு கார்டு வழங்கும்படி கோரியும் தீர்மானங்கள் நிறைவேற்றப்பட்டன.

முதல் பக்கத் தொடர்ச்சி

# இந்திய முதலாளித்துவத்தின் முரண்பாடு......

பேரம் பேசுவதற்கும் மறுபுறத்தில் தங்களை வளர்த்துக்கொள்வதற்கும் சோஷலிஸ முகாமின் உதவியைப் பயன்படுத்த இப்பகுதி தயங்குவதில்லை. அதேசமயத்தில் இப்பகுதி மக்கள் எதிர்ப்புத் தன்மை, கம்யூனிஸ்ட் எதிர்ப்புத் தன்மை வாய்ந்ததாகவும் இருக்கிறது.''

இவ்வாறு இந்தியப் பெரும் பூர்ஷ்வாக்களுக்கும் ஏகாதிபத்தியத்திற்குமிடையேயுள்ள முரண்பாட்டைக் குறிப்பிடுகின்ற அதே சமயத்தில் இவர்கள் ஏகாதிபத்திய முதலாளிகளுடன் இன்று கூட்டு சேர்ந்துகொண்டு இந்திய மக்களைச் சுரண்டுவது பிரதான அம்சமாக உள்ளதை நமது நகல் திட்டம் குறிப்பிடுகிறது. எனவே ஜனநாயகப் புரட்சியின் பிரதான இலக்கு ஏகாதிபத்திய எதிர்ப்பு, நிலப் பிரபுத்துவ எதிர்ப்பு ஏகாதிபத்தியத்துடன் கூட்டுசேர்ந்து கொண்டு கொள்ளையடிக்கும் இந்திய ஏகபோக முதலாளித்துவ எதிர்ப்பாகவே இருக்கும்.

அதேசமயத்தில் இந்திய முதலாளி வர்க்கம் முழுதையும் ''ஒரு கூடை செங்கலும் பிடாரி'' என்ற முறையில் நாம் பார்க்கவில்லை. பூர்ஷ்வா வர்க்கத்திற்குள் பல பிரிவுகள் உள்ளன. பூர்ஷ்வாப் பகுதியில் ஏகபோக முதலாளித்துவப் பகுதி, ஏகபோகத் தன்மையில்லாத பூர்ஷ்வாப் பகுதிகள், சிறு முதலாளிகள் உண்டு. ஒருபுறத்தில் ஏகாதிபத்தியம் பெரும் பூர்ஷ்வாப் பகுதிக்கும் மறுபுறத்தில் மற்ற முதலாளித்துவ பகுதிக்குமிடையே முரண்பாடு உண்டு. நாளாவட்டத்தில் இந்த முரண்பாடு தீவிரமாகும். இந்த முரண்பாடு பெரும் பூர்ஷ்வாக்களுக்கும் ஏகாதிபத்தியத்திற்கு மிடையேயுள்ள முரண்பாடு போன்றதல்ல. இந்த முரண்பாடு ஏகாதிபத்தியத்துடன் சமரசம், உடன்பாடு, கூட்டு சேரும் தன்மைகொண்டது. ஆனால் ஒருபுறம் மறுபுறம் தேசிய முதலாளிகளுக்கும் பெரும் பூர்ஷ்வாக்கள் — ஏகாதிபத்திய முதலாளிகளுக்கு மிடையேயுள்ள முரண்பாடு வேறு தன்மையுள்ளது; அது அடிப்படையான முரண்பாடாகும்: புரட்சித் தன்மையுடையதாகும். ஜனநாயகப் புரட்சியின் பக்கம் அத் தேசிய முதலாளிகள் சேரக்கூடிய தன்மையுடையதாகும். எனவே இதன்பால் ஜனநாயக முன்னணி கொள்ளும் பார்வையும் மாறுபடுகிறது. ஏகபோக முதலாளித்துவப் பகுதியை தன் எதிரியாகக் கருதும் ஜனநாயக முன்னணி சாதாரண முதலாளித்துவப் பகுதியை தன்பால் இழுத்துக்கொள்ளும் பார்வையுடன் செயல்படுகிறது. இதையே நமது நகல் திட்டத்தின் 117, 118 ஷரத்துக்களில் கீழ்வருமாறு குறிப்பிடுகிறோம்:—

''தேசிய பூர்ஷ்வா (முதலாளி) வர்க்கத்தின் இதர விரிவான பகுதிகள் இருக்கின்றன. அன்னிய ஏகபோக முதலாளிகளுடன் எவ்வித இணைப்புக்களையும், அல்லது நிலைத்து நீடித்திருக்கக்கூடிய இணைப்புகள் எதையும் இப் பகுதிகள் கொண்டிருக்கவில்லை. இவர்களுக்கு ஏகபோக முதலாளித்துவ தன்மை இல்லை என்பதுடன் ஏகபோக முதலாளிகளினால் இப் பகுதியினர் பலவழிகளில் அவதிப் படுகின்றனர். நிலப் பிரபுத்துவ எதிர்ப்பு, மற்றும் ஏகாதிபத்திய எதிர்ப்புப் புரட்சியின் பிரதான கடமைகள் நிறைவேற்றப்படுவதில் தேசிய பூர்ஷ்வா வர்க்கத்தின் இப் பகுதிகள் யதார்த்தத்தில் அக்கரைகொண்டிருக்கின்றன. உலக முதலாளித்துவ அமைப்பின் பொது நெருக்கடி ஆழமாகிறபொழுது, அன்னிய ஏகபோக முதலாளிகளுக்கும் இப் பகுதிகளுக்குமிடையேயுள்ள முரண்பாடு உச்சவேகத்தில் வளரும்போது, தன்னுடைய பொருளாதார அதிகாரத்தையும் அரசாங்கத்தில் தனக்குள்ள தலைமை வகிக்கும் நிலையையும் பயன்படுத்திக்கொண்டு நாட்டிலுள்ள தன்னுடைய வர்க்கத்தின் பலவீனமான பகுதியினர்மீது கைவைத்து தன்னுடைய நெருக்கடியைத் தீர்த்துக்கொள்வதற்கு பெரும் பூர்ஷ்வாக்கள் முயற்சி செய்யும் போது, இப் பகுதியினர் அரசாங்க அதிகாரத்திற்கெதிராக முன்வரவேண்டிய நிர்ப்பந்த நிலைமைக்கு வருவார்கள்.

''ஒருபுறத்தில் ஏகாதிபத்திய வாதிகள், நம் தேசத்திலுள்ள அவர்களது பெரும் பூர்ஷ்வாக் கூட்டாளிகள் ஆகியோருக்கும் மறுபுறத்தில் மக்கள் ஜனநாயக முன்னணிக்குமிடையில் இப் பகுதிகள் மிகவும் அதிகமான ஊசலாட்டத்தை வெளிப்படுத்துகின்றன... வர்க்க சக்திகளில் ஏற்படும் மாறுதல்கள், ஏகாதிபத்தியம், நிலப் பிரபுத்துவம், மக்கள் ஆகியோருக்கிடையில் ஏற்படும் முரண்பாடுகள் தீவிரமடைவதையும், பெரும் பூர்ஷ்வாக்கள் தலைமையிலுள்ள இன்றைய பூர்ஷ்வா நிலப் பிரபுத்துவ அரசாங்கத்திற்கும் தேசிய பூர்ஷ்வா வர்க்கத்தின் இதர பகுதிகளுக்குமிடையில் ஏற்படும் முரண்பாடுகள் தீவிரமடைவதையும் பொறுத்திருக்கிறது, இப் பகுதிகள் ஜனநாயகப் புரட்சியில் பங்கெடுத்துக்கொள்ளும் பிரச்சினை...... இப்பகுதிகளை ஜனநாயக முன்னணிக்கு வெல்லுவதற்கு சகல முயற்சிகளும் செய்யப்படவேண்டும்.''

இவ்வாறு இந்திய முதலாளித்துவப் பகுதிகளின் இன்றைய வளர்ச்சிப் போக்குகளை கணக்கில் எடுத்துக்கொண்டு அவைகளில் எந்தப் பகுதியினரை எதிர்த்து ஜனநாயக இயக்கம் போராடவேண்டுமென்பதையும், எந்தப் பகுதியிரை ஜனநாயக அணிக்கு வெல்ல முடியும், வெல்லவேண்டுமென்பதையும் துல்லியமாக ஆராய்ந்து மேற்கூறிய முடிவுக்கு வந்துள்ளோம். இந்தப் பார்வை 1948-ல் நமக்கிருந்த பார்வையிலிருந்து முற்றிலும் மாறுபட்டது. சகல முதலாளிகளையும் எதிர்த்து உடனடியாக முறியடித்தாக வேண்டும் என்ற போக்கிலிருந்து மாறுபட்டிருக்கும். எனவே சில தோழர்கள் நமது இன்றைய திட்டம் மீண்டும் நம்மை 1948 கணிப்பிற்குக் கொண்டுசெல்லும் என்று எண்ணுவதற்கு இடமில்லை.

இறுதியாக மக்கள் ஜனநாயக முன்னணியைப் பற்றி ஒரு வார்த்தை. இதன் தலைவன் தொழிலாளி வர்க்கம் அதன் உறுயாதின நேச அணி விவசாய வர்க்கம் ஜனநாயகப் புரட்சியின் மையம் தொழிலாளி— விவசாயி கூட்டணி. விவசாய வர்க்கம் என்று நாம் கூறும்போது விவசாயத் தொழிலாளிகள் ஏழை விவசாயிகளை முதலில் குறிப்பிடுகிறோம். மத்தியதர விவசாயிகள் ஊசலாட்டமுள்ள பகுதி என்றாலும் இன்றைய ஏகபோக முதலாளித்துவ, நிலப் பிரபுத்துவ சுரண்டலினால் கடுமையாகப் பாதிக்கப்படுவதானால் ஜனநாயக அணியில் சேரும் நம் பிக்கையான நேச சக்தியாக விளங்கும்.

பணக்கார விவசாயிகளுக்கும் ஏகபோக முதலாளிகள்— நிலப் பிரபுத்துவப் பகுதிகளுக்கிடையே முரண்பாடு உண்டு. இன்றைய அரசின் சில நிலச் சீர்திருத்தச் சட்டங்களில் நன்மை அடைந்த பகுதி இது. இவர்களுடைய நிலத்தில் சாகுபடி செய்ய விவசாயத் தொழிலாளிகளைப் பயன்படுத்துவதால், பணக்கார விவசாயப் பகுதிக்கும் விவசாயிகளுக்குமிடையே முரண்பாடு உண்டு. ஆனால் ஏகபோக முதலாளித்துவச் சுரண்டல் தீவிரமாகும் அவர்களுக்கும் பணக்கார விவசாயப் பகுதிக்குமிடையே உள்ள முரண்பாடும் நிலப் பிரபுக்களுக்கும் பணக்கார விவசாயிகளுக்குமிடையேயுள்ளமுரண்பாடும் தீவிரமாகும். அந்த முரண்பாடு தீவிர கட்டத்தை அடையும் போது நமது புரட்சி நிலப் பிரபுத்துவ எதிர்ப்பு, ஏகாதிபத்திய எதிர்ப்பு தன்மை அடைவதால், இந்தப் பகுதியை ஜனநாயக முன்னணிக்குள் கொண்டுவரும் வாய்ப்பு உண்டு.

அதேபோல் இன்றைய அரசின் கொள்கைகளால் பாதிக்கப்படும் நகரப்புற மத்தியதர வர்க்கங்களும் ஜனநாயக முன்னணியில் சேரக்கூடிய நேச சக்தியாகும்.

---

# டிராலி கம்பெனி முன் சத்யாகிரகப் போராட்டம்

## சங்கத்தின் பொதுச் செயலாளர் தோழர் கே. எம். ஹரிபட் அறிக்கை

மேற்படி ஸ்தாபனத்தின் பழிவாங்குதல், வேலை பளுவை திணித்தல், தொழிற் சங்க ஊழியர்களை திட்டமிட்டு பழிவாங்குதல் ஆகிய படுமோசமான போக்கை எதிர்த்து கடந்த 1-7-1964 முதல் 25 நாட்களாக வேலை நிறுத்தம் வெற்றிகரமாக நடந்து வருகிறது.

நிர்வாகத்தினர் மேலும் பழிவாங்கும் நோக்கத்துடன் 56 தொழிலாளிகளை வேலையிலிருந்து நீக்க சென்னை லேபர் ஆபீசர் திரு நடராஜன் முன்பாக அனுமதி கேட்டுள்ளனர்.

அதே நேரத்தில் கடந்த 20-7-64 முதல் புது தொழிலாளிகளை வேலைக்கமர்த்தி பழிவாங்க முயற்சிக்கின்றனர்.

எனவே பாதிக்கப்பட்ட தொழிலாளர்கள் டிராலி கம்பெனி கேட்டுமுன் 27-7-64 காலை 7 மணிமுதல் மறியல் போராட்டம் நடத்திவருகிறார்கள்.

ஆகவே மேற்படி தொழிலாளிகளின் நியாயமான வாழ்வு போராட்டத்திற்கு தமிழக தொழிலாளர்களும் பொது மக்களும் ஆதரவு அளிக்க வேண்டுமாய் கேட்டுக்கொள்கிறோம். சர்க்காரும் உடன் தலையிட்டு தீர்க்க முன் வரவேண்டுமாய் கேட்டுக்கொள்கிறோம்.

---

# தோழர் பி. ராமமூர்த்தி சுற்றுப்பயணம்

ஆகஸ்ட் 5-ம் தேதி—சென்னை
,, 6-ம் தேதி—பாண்டிச்சேரி
,, 7-ம் தேதி—தஞ்சை மாவட்டம்
,, 8-ம் தேதி முற்பகல்வரை—தஞ்சைமாவட்டம்
,, 8-ம் தேதி மாலை—காரைக்கால் பொதுக்கூட்டம்
,, 9-ம் தேதி—சிதம்பரம்
,, 15-ம் தேதி—கோவை
,, 16-ம் தேதி—மதுரை
,, 17-ம் தேதி—சிவகிரி (நெல்லை மாவட்டம்)
,, 18-ம் தேதி—(ராமநாதபுரம் மாவட்டம்)
,, 19-ம் தேதி—(திருச்சி)

# ஈட்டி முனை

## ஏழை பங்காளர்கள்

சென்ற ஒரு வார காலமாக தமிழ்நாடு காங்கிரசார் நாட்டில் வறுமையை ஒழிக்க, ஏழை மக்களை உயர்த்த அரும்பாடுபட்டு ஒரு வாரம் கொண்டாடினர். ஆகா! அந்த ஒரு வார ஜனநாயக சோஷலிஸத்தைப் பாராத கண்கள் பெரும் பாவம் செய்த கண்கள்! என்ன எளிமை! ஏழைகளின் பால் என்ன அன்பு! என்ன பரிவு! என்ன கனிவு! கரை புரண்டு ஓடியது சென்னைத் தெருக்களில்!

ஏழைகள் பிரயாணம் செய்யும் பஸ் கட்டணத்தை உயர்த்தி ஜனநாயக சோஷலிஸம் என்றால் என்ன என்பதை தமிழ் மக்களுக்கு எடுத்து உபதேசம் செய்த கனம் வெங்கட்ராமன் அவர்கள் இந்த வாரத்தில் செய்த சண்டப் பிரசண்டங்களைப் பற்றி இங்கு குறிப்பிடவில்லை. காங்கிரசாரின் இந்த ஜனநாயக சோஷலிஸ வாரத்தில் உச்சாணிக் கொம்பில் நின்ற "பரம ஏழை மக்கள்" யார், அவர்கள் எவ்வாறு இந்த வாரத்தைக் கொண்டாடினார்கள் என்பதைப் பார்ப்போம்.

'ஜனநாயக சோஷலிஸம்' என்றவுடனேயே 'பரம ஏழையான' ஸ்டுடியோ அதிபதிகளான ஏ.வி.எம்., ஜெமினி, சினிமா உற்பத்தியாளர்களான சின்னப்பதேவர், சிவாஜி கணேசன் ஆகியோரது பிரம்மாண்டமான வளைவுகள் மீனம்பாக்கத்திலிருந்து ஐலண்டு மைதானம் வரை 16 மைல் மவுண்ட்ரோடை அலங்கரித்தன. கிட்டத்தட்ட இரண்டு மூன்று லட்ச ரூபாயாகிலும் இவர்கள் செலவழித்து ஜனநாயக சோஷலிஸத்தின்பால் இவர்களுக்குள்ள காதலைப் பறையறைந்தனர்.

இந்திய நாட்டிலேயே மிகப் பெரிய முதலாளிக் கமபெனிகளில் ஒன்று கலிங்கா பைப் கம்பெனி. இந்தக் கம்பெனிக்குச் சொந்தமான 10 ஆயிரம் "ஹியூம் பைப்"களை கொடிக் கம்பங்களாக நட்டு காங்கிரஸ் கொடிகளைப் பறக்கவிட்டனர் ஜவுளி முதலாளிகள் இரண்டு லட்சத்திற்கு மேல் கொடிகள் தைத்துக் கொடுத்தனராம். ஊர்வலத்தில் அரசாங்கத்திற்குச் சொந்தமான ஜீப்புகள் பங்குகொண்டன தென்னிந்தியாவில் மிகப் பெரிய மோட்டார் கம்பெனியான ராயல் என்பீல்டு மோட்டார் கம்பெனி 62 மோட்டார் பைக்குகளை ஊர்வலத்தில் ஓட்டிச் செல்லக் கொடுத்தது. இந்த ஊர்வலத்தில் வெள்ளோட்டம் பார்த்த பிறகு இவை—இந்திய அரசாங்கத்திற்கு விற்கப்படப்போகின்றனவாம்.

வெளியூரிலிருந்து வந்த பஸ்கள் பெரும்பாலானவை டி. வி. எஸ். முதலாளிக்குச் சொந்தமானவையாம். வெளியூரிலிருந்து வந்த ஏனைய பஸ்களுக்கு சினிமா முதலாளிகள் பெட்ரோலை தாராளமாக வழங்கினர்.

'சோளியன் குடுமி சும்மா ஆடுமா?' காங்கிரசாரின் ஜனநாயக சோஷலிஸம் யாருக்கு உற்சாகமளித்தது என்பதற்கு மேற்கூறிய பட்டியல் போதும்! காமராஜர் பிறந்த தின கொண்டாட்டத்தை ரூ. 10 லட்சத்திற்கு மேல் செலவழித்து மேற்கூறிய "ஏழை மனிதர்"கள் வெகு உற்சாகமாகக் கொண்டாடியுள்ளனர்.

நேரு இறந்து இரண்டு மாதம்கூட ஆகவில்லை. நேரு பிறந்த தின விழாவை "இந்த பாணியில்" எப்பொழுதுமே கொண்டாடியதில்லை. இந்த அளவு படாடோபம் எப்பொழுதுமே எந்தத் தலைவருக்கும் இருந்ததில்லை. ஆனால் இன்று இத்தகைய நிகழ்ச்சி நிகழக் காரணமென்ன? வேறு ஒன்றுமில்லை. காங்கிரஸ் ஆட்சியில் மேற்கூறிய "ஏழை மனிதர்கள்" வாழ்வதற்கு நல்ல வழி பிறந்துள்ளது. அவ்வளவுதான்.

காங்கிரசாரின் இந்த ரக ஜனநாயக சோஷலிஸத்தின்பால் தமிழ்நாட்டு முதலாளிகள் மட்டுமல்ல, தமிழ்நாடு கம்யூனிஸ்டு கட்சியின் வலது சாரித் தலைவர்களுக்கும் கைக்கிளை பிறந்தது. (இதன் பொருள் ஒருதலைப்பட்சமான காதல்) சில தலைவர்கள் ஜனநாயக சோஷலிஸ அரங்கில் பங்குகொள்ளப் போனார்களாம். அந்தோ! பரிதாபம்! பரிதாபம்! அவர்களுடன் இருந்த அவர்களது 'தேசிய அணி' புகழ் திரு சம்பத்தை மேடைக்கு அழைத்துக் கொண்டுபோய் பேச வைத்தனர் காங்கிரஸ்காரர்கள் ஆனால் அவர்கள் வலதுசாரி கம்யூனிஸ்டுகளை ஏறெடுத்தும் பார்க்கவில்லையாம். காலமெல்லாம் காதலித்தும் காங்கிரசாரின் கடைக்கண் பார்வையைக்கூட பெறமுடியாது போயிற்று! பரிதாபம்! காமராஜர் பிறந்த தின விழாக் கமிட்டியில் உறுப்பினராக இருந்தும்கூடப் பயன்படவில்லை பரிதாபம்!

இவ்வாறு வலதுசாரிகளின் ஒருதலைப்பட்சமான காதல் (கைக்கிளை) தோற்றதால் அடுத்த கட்டமான மடலேறும் வைபவம் இனி நடக்கலாம்.

—கே. எம்.

## தோழர் முசாபர் அகமது அவர்கள் பிறந்த தின விழா

தோழர் முசாபர் அகமதுவின் பிறந்த நாளான 5-8-64ம் தேதியன்று அவருக்கு அனுப்பும் வாழ்த்துச் செய்திகளையும் தந்திகளையும் பின்வரும் விலாசத்திற்கு அனுப்பும்படி தோழர்களைக் கேட்டுக்கொள்ளுகிறோம்.

Comrade MUZAFFAR AHMED
16, Karaya Road,
Calcutta-19.

—(மாநில இணைப்புக் குழு)

## வருந்துகிறோம்

திண்டுக்கல் தாலுக்கா எரியோடு கம்யூனிஸ்ட் கட்சிக் கிளை செயலாளரும், சிறந்த ஊழியருமான கடவுள் என்ற தோழர் எம். சாமிக்கண் நோய்வாய்ப்பட்டு திண்டுக்கல் அரசினர் மருத்துவ மனையில் 23-7-64ந் தேதி காலை 4 மணி அளவில் காலமானார்.

தோழர் எம். சாமிக்கண் நான்கு வருடங்களுக்கு முன்னால்தான் கட்சியில் உறுப்பினராகி, சமீப இரண்டு வருடங்களுக்கு முன்னால் செயலாளராக பொறுப்பேற்றார்.

அவரின் உயிர் பிரியும் கடைசி நிமிடம் வரையும், கம்யூனிஸ்ட் கட்சியின் வளர்ச்சிக்காகவும். இந்தக் காலத்தில் கட்சியில் தோன்றியுள்ள திரிபுவாதத்தையும். கொள்கைப் புரட்டர்களையும் எதிர்த்துப் போராடினார்.

22 வயதே நிரம்பிய திருமணமாகாத இளைஞர். 24-7-64 மதியம் 1 மணி அளவில் பிரம்மாண்டமான சவ ஊர்வலம் நடந்தது. எல்லாக் கட்சியினரும் கலந்துகொண்டனர். 24-7-64ந் தேதி எரியோடு கட்சிக் கிளையின் சார்பில் பொதுக்கூட்டம் தோழர் ஐ.எம்.பி. கண்ணன் தலைமையில் நடந்தது. ஒரு நிமிடம் கூட்டத்தினர் எழுந்துநின்று அஞ்சலி செய்தனர். பிறகு தோழர் எம். பி. மணிவேல், தோழர் எம். ஆண்டிவேலன் ஆகியோர் பேசினார்கள்.

மறைந்த தோழரின் குடும்பத்திற்கு "தீக்கதிர்" தன்னுடைய வருத்தத்தைத் தெரிவித்துக்கொள்கிறது.

## தஞ்சை மாவட்ட கட்சி மாநாடு செப்டம்பர் 11, 12, 13-ல் நடக்கிறது

இணைப்புக்குழு கூட்டம் 24-7-64, 25-7-64 ஆகிய தேதிகளில் மன்னார்குடியில் நடைப்பெற்றது.

தோழர் வி. பி சிந்தன் அக்கூட்டத்தில் கலந்துகொண்டு தெனாலி கன்வென்ஷன் முடிவுகள் பற்றியும். நகல் திட்டம் பற்றியும் விளக்கவுரை ஆற்றினார்.

ஆகஸ்டு மாதம் 20-ம் தேதிக்குள் கிளைகளின் மாநாடுகளை நடத்தி முடித்து விடுவதென்று முடிவு செய்யப்பட்டது.

பட்டுக்கோட்டை தாலுக்கா மாநாடு கீவளூர் வட்டாரமாநாடு நன்னிலம் தாலுக்கா மாநாடு. குடந்தை தாலுக்கா மாநாடு, சீர்காழி தாலுக்கா மாநாடு. தஞ்சை தாலுக்கா மாநாடு, நாகை நகர மாநாடு, மாயூரம் தாலுக்கா மாநாடு, நாகை வட்டார மாநாடு, மன்னார்குடி தாலுக்கா மாநாடு, ஆகியவற்றை 18-8-64 ம் தேதியிலிருந்து 31-8-64-ம் தேதிக்குள் நடத்தி முடிப்பதென்று மாவட்ட இணைப்புக் குழு தீர்மானித்தது

செப்டம்பர் 11, 12, 13 ஆகிய தேதிகளில் தஞ்சை மாவட்ட கட்சி மாநாட்டை திருவாரூரில் சிறப்பாக நடத்துவதென்று முடிவு செயயப்பட்டது. மற்றும் பல தீர்மானங்கள் நிறைவேற்றப்பட்டன.

## ராஜபாளையத்தில் இணைப்புக் குழு அமைக்கப்பட்டது

நகர இணைப்புக் குழு அமைப்புக் கூட்டம் 24-7-64 ம் தேதியன்று காலை 10 மணிக்கு நடைபெற்றது. தோழர் என். கே. சுப்பையா கூட்டத்திற்குத் தலைமை வகித்தார்.

25 கட்சி அங்கத்தினர்களும் பல தீவிர அனுதாபிகளும் இக்கூட்டத்தில் கலந்துகொண்டனர்.

கட்சி செயலாளராக தோழர் எஸ். கந்தசாமி தேர்ந்தெடுக்கப்பட்டார். தோழர்கள் இரா வைரவநாதன் (பொருளாளர்) இரா. துரைசாமி, கே. சோமு, வே. குருசாமி, முத்துராமய்யா குமார், எஸ். வி. வேலு சி. மாநாடு ஆகியோர் நகர் இணைப்புச் கமிட்டி உறுப்பினர்களாகத் தேர்தெடுக்கப்பட்டனர். கட்சி வேலைகளை திட்டமிட்டு நடத்துவதற்கு பல முடிவுகள் செய்யப்பட்டன.

Edited and Published by Sri M. N. Ravunni, 2, Alandoor Road, Saidapet, Madras-15.
Printed by Sri A. N. Sathyanarayanan, Geetha Printing Works, 4, Hospital Road, Saidapet, Madras-15.